# ஸாரிடான் கூட உங்கள் உடல்வலியைப் போக்காவிடில், ஒரு டாக்டரிடம் செல்லுங்கள்.

ஒரு ஸாரிடான், தலைவலியை உடனே போக்குகிறது. உங்களை இளைப்பாற்றிப் புத்துணர்வோடு இருக்கச் செய்கிறது. ஆயினும், சில சமயங்களில் ஒரு ஸாரிடான் கூட உதவமுடியாத அளவு




உடல் வலி கடுமையாகவும் தீவிரமாகவும் இருக்கக் கூடும். அத்தகைய சமயங்களில் டாக்டரிடம் செல்லுங்கள். உங்களுக்குச் சரியான மருந்தை டாக்டர் தரட்டும்.

## ஸாரிடான்

ட்ரேட்மார்க் 'ரோஷ்'

வலிமையானது. பாதுகாப்பானது. ஒன்றே ஒன்று போதுமானது.



RP-4161




மநுஷ்ய ரீதியில், தன்னைக் கொஞ்சம் அதிகமாகவே குறைத்துக்கொண்டு துர்யோதனனிடம் தூது போனவர் அங்கேயே தம் ஈச்வரத்வம் தெரிகிறமாதிரி விச்வரூபம் காட்டினார். அப்புறம் பாரத யுத்தத்தின் போது தம்மை இன்னமும் சின்னவனாக்கிக் கொண்டு அர்ஜுனனுக்குக் குதிரைக் காஸாரி வேலை பண்ணினபோதே இன்னொரு தரம் அவனுக்கு விச்வரூபம் காட்டினார். யுத்தத்தில் ஆயுதமே எடுக்காதவர் அர்ஜுனனுடைய ஆயுளை ரக்ஷிப்பதற்காகச் சக்ராயுதத்தால் ஸூர்யனையே மறைத்தார்.

அவரிடத்திலே அலாதியான அம்சம் என்னவென்றால் ரொம்ப |வித்தியாசமிருப்பதையெல்லாம் தன்னிடம் ஒன்றாகச் சேர்த்துக் கொண்டு Contrast களை harmonise பண்ணிக் கொண்டதுதான். இதற்குப் பௌராணிகர்கள் வேடிக்கையான திருஷ்டாந்தமாக, 'எவன் ஆதியில் கோப ஸ்திரீகளின் வஸ்திரங்களை அபகரித்தானோ அவனே பிற்காலத்தில் த்ரௌபதியின் வஸ்திராபஹரணத்திலே அக்ஷயமாகப் புடவையைக் கொடுத்து மான ஸம்ரக்ஷணம் பண்ணினான்' என்பார்கள். (இதிலே தத்வார்த்தம் — கோபிகை விஷயத்தில், அஹம் பாவம் கொண்டிருக்கிற ஜீவனின் சரீரப் பிரக்ஞை, மானாபிமானங்களைப் போக்குவது; த்ரௌபதி விஷயத்தில், சரணாகத ரக்ஷணம்.)

எந்தத் தொழிலும் இழிவில்லை என்று தேரோட்டியானவர், தாம் பண்ணின இந்தக் கர்ம யோகத்தை மட்டுமின்றி, பக்தி யோகம், ஞான யோகம் எல்லாவற்றையும் கீதோபதேசமாகப் பண்ணி பரமாசார்ய புருஷராகவும் இதே வேஷத்தின் போது இருந்தார்! கையில் குதிரைக் கடிவாளம், வாயில் பிற்காலத்தில் அத்தனை ஆசார்யர்களும் பாஷ்யம் எழுதப் போகிற உச்சமான உபதேசம் என்று ஆச்சரியமாகக் காட்டினார்! இந்த ஞான கீதையைப் பண்ணினவரேதான் பால்யத்தில் வேணு கான கீதத்தை ஊதியவர். ஃபிலாஸஃபி சொல்பவர்கள் ஸீரியஸாகத்தான் இருக்க வேண்டும் என்றில்லாமல் அவர் பாட்டும் கூத்துமாக அமர்க்களப்படுத்தியிருக்கிறார்!

ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவிடம் எல்லாவற்றையும் விடப் பெருமை என்னவென்றால் பரமேச்வர சக்தியோடிருந்தவரே, ராமர் மாதிரி ஸாதாரண மநுஷ்யராக மட்டுமில்லாமல், ஸாதாரணத்துக்கும் கீழ்ப்பட்ட எளியவர்களில் எளியவராக இருந்தது. உயர்வுக்கெல்லாம் உயர்வானவர் எதுவுமே தெரியாத இடைப் பசங்களில் ஒருத்தராகப் பரம அன்போடு அவர்களுடன் திரிந்தார்; இடைச்சிகளிடம் அடிபட்டார். தர்ம புத்ரரின் ராஜஸூய யாகத்துக்கு வந்தவர்களுக்குத் தாமே கால் அலம்பி வரவேற்றார்.

இப்படி நமக்கு 'ஐடியலாக' ராமன்மாதிரி இருந்தது மட்டுமில்லை. அநேக விஷயங்களில் அவரை ஐடியலாக வைத்துக்கொள்ள முடியாதபடி, 'ஜார சோர சிகாமணி' என்றும் 'கபட மாயாவி' என்றும் சொல்லும்படியாகவும் நடந்து கொண்டார். பக்தியோடு உள்ளே புகுந்து தத்வார்த்தத்தைப் பார்த்தால் அவர் ஜாரரும் இல்லை, சோரரும் இல்லை, கபடரும் இல்லை என்கிறது ஒரு பக்கம் இருக்கட்டும் வெளியே அப்படித் தெரிந்தாரோ இல்லையோ? இதற்கு எனக்கு ஒரு காரணம் தோன்றுகிறது: 'பூர்ணாவதாரம்' என்றால் திவ்ய சக்தி பூர்ணமாயிருந்து விட்டால் மட்டும் போதுமா? மநுஷ்ய குணங்களையும் பூர்ணமாகக் காட்டினால்தான் அந்த 'டைட்டில்' பொருந்தும்? அதனால் தான் ஏறுமாறாக மநுஷ்யர்களில் எல்லாத் தரங்களையும் அவர் 'ரெப்ரஸெண்ட்' பண்ணுவது என்று வைத்துக் கொண்டு விட்டார்! இதைவிட இன்னும் நல்லதாக ஒரு காரணம் சொல்கிறேன். இந்த அவதாரத்தினால், இதன் கதையினால் மநுஷ்யர்களில் அத்தனை வர்க்கங்களையும் — திருடன், காமுகன், ஏமாற்றுக்காரன் உள்பட சகலரையும் — ஆகர்ஷிக்க வேண்டும் என்று அவர் நினைத்தார். ரொம்பவும் ஸத்ய தர்மங்களோடு வாழ்ந்த ஒருத்தன் கதை என்றால், அது மாறுதலாக இருக்கிற கூட்டத்தைக் கவராது அல்லவா? அதனால்தான் தப்பாகப் போனவர்களுக்குக் கூட, ''அப்பா, உன் கதையையும் நான் பண்ணிக் காட்டியிருக்கிறேன், பார்'' என்று எத்தனை திரிசமன் உண்டோ, க்ருத்ரிமம் உண்டோ எல்லாவற்றையும் பரமத் தியாகமாகப் பண்ணிக் காட்டி யிருக்கிறார்! இவரிடம் இழுபட்ட பின் அப்புறம் தப்பு, தண்டாக்கள் தன்னால் போக ஆரம்பித்துவிடும்.

அவர் இப்படி என்னதான் பண்ணினாலும் பிரம்ம ஸ்வரூபமாகவே ஒரு அழுக்குப் படாமல் ஸ்வச்சமாக இருந்தவர். அதனால்தான் பரம அத்வைதிகளாக நிர்குணத்தையே (குணம் கடந்த பரம்பொருளையே) உபாஸித்த சுகப் பிரம்மம், (சங்கர) பகவத்பாதாளிலிருந்து ஆரம்பித்து மதுஸூதன ஸரஸ்வதி, (ஸதாசிவ) பிரம்மேந்திரான்வரையில் பரம ஞானிகளாக இருந்தவர்களுக்கும் க்ருஷ்ணன் என்ற ஸகுண மூர்த்தியிடம் அலாதியான பக்தி இருந்திருக்கிறது. 'கண்ணன்' என்றே தமிழில் பரமப் பிரேமையோடு அழைக்கப்படும் அவன் நமக்கு அன்பையும் அறிவையும் தரும் அகக் கண்ணைத் திறந்து வைப்பானாக!

# 'க்ளவுஸ்'

தன்...

தன்தன்....

ஒவ்வொரு குத்துக்கும் அந்த மணல் நிரப்பப்பெற்ற நீண்ட தோற்பை ஊசலாடுகிறது. இத்தனைக்கும் கையில் 'கிளவுஸ்' இல்லாமலேயே தனது பலங்களையெல்லாம் முஷ்டிகளில் திரட்டிக் குத்து குத்தென்று குத்துகிறான் ராஜமாணிக்கம்.

ஒன்று இரண்டா?

தொடர்ந்து ஒரு மணி நேரமாக அந்தத் தோற்பை திண்டாடுகிற வரைக்கும் குத்திப் பழகுகிறான். காலை எழுந்தது முதல்கொண்டு செய்து முடித்த உடற் பயிற்சிக்குப் பிறகு இது கடைசி முத்தாய்ப்பு போலக் குத்துச் சண்டைப் பயிற்சி.

ராஜமாணிக்கத்தின் முகத்திலும் மார்பிலும் தொடைகளிலும் புஜங்களிலும் வியர்வைத் துளிகள் அரும்பி அருவியாகப் பாய்ந்தோடுகின்றன.

அவனை — ஜன்மப் பகைவனை — சாந்தலிங்கத்தை — இன்றைக்கு நடக்கவிருக்கும் குத்துச்சண்டையின் ஆறு சுற்றில் (Six Rounds) இரண்டாவது சுற்றிலேயே ஒரே நாக்கவுட்...

கதவண்டை எவ்வளவு நேரம்தான் கண்ணீருடன் நின்று கொண்டிருப்பாள் கனகம். அவள் வந்த நோக்கம் வீழ்ந்து பட்டு, மாலை தனது வாழ்வே பொடிபட்டுத் தாழ்ந்து விடுமோ என்று அஞ்சுகிற மனநிலையில் ஏற்பட்ட பரிதவிப்பு... ''ராஜு...''

சன்னமாகவும் தீனமாகவும் அழைக்கிற அந்தக் குரலைக் கேட்டு...

வியர்வைத் துளிகளால் விகாரப்பட்ட ராஜமாணிக்கத்தின் கண்கள் வியப்பால் சுருங்கி ஒரு கணம் உடலே ஸ்தம்பிக்கிறது.

ஐந்தாண்டு காலமாகத் தன் முன் தென்படாதவள்—சந்திக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு அவனே விரும்பி முயன்றபோதும் முடியாத கனக ரூபம், இப்போது அவன் கண் முன்னே...

ஆ....!

ஐந்தாண்டுகளுக்கு முன்பு அவளும் அவனும் ஆத்ம சுத்தி நிறைந்த அந்தரங்கக் காதலர்கள். எதிரும் புதிருமாக இருந்த அவர்களது வீட்டுச் சன்னல்களுக்கு அவர்கள் கண்களால் பேசிய பிரேம பாஷைகளின் பொழிப்புரைகள் விளக்கமானவை.

அப்போது ராஜமாணிக்கமும் சாந்தலிங்கமும் உற்ற நண்பர்கள். இருவருமே குத்துச் சண்டை வீரர்கள். ஆனாலும் வெவ்வேறு பரம்பரையினர்கள். ராஜமாணிக்கம் சார் பட்டா பரம்பரை. சாந்தலிங்கம் இடியப்ப நாயக்கன் பரம்பரை. இரண்டுமே இரு துருவமான பகைப் பரம்பரை யானாலும், இந்த இருவரும் ஒரு துருவமாய் நட்பில் பிணைந்து அன்பில் பிரகாசித்தவர்கள். இந்த இருவரையும் மூட்டி விட்டு ஜதை (குத்துச் சண்டை) நடத்த முயற்சி செய்த பெரும் பெரும் காண்ட்ராக்டர்கள் தோல்வியுற்றுப் பொருமினர்: இந்த இருவர் மட்டும் ஒப்புக்கொண்டுகோதாவில் இறங்கிவிட்டால்?

அடடா! கலெக்ஷனோ கலெக்ஷன்!... பணத்தை வாரிக் குவித்துவிட முடியும்!

இவர்கள் இவ்விதம் இறங்குவதானால் பெரிய புள்ளிகள் — குத்துச் சண்டைப் பந்தயப் பைத்தியங்கள் பலர் தத்தம் வீடுகளையே பந்தயமாக வைக்கக் காத்துக் கொண்டிருந்தனர்.

கோவி. மணிசேகரன்





**சிறுகதை குதிரைப் பந்தயம் போல். தொடக்கமும் முடிவும் சுவை மிக்கனவாக இருக்க வேண்டும்.**

- செட்ஜ்விக்



குத்துச் சண்டை மாவீரரான கித்தேரி முத்துவிடம் ராஜமாணிக்கம் பயிற்சி பெற்ற சார்ப்பட்டா வாரிசு. சாந்தலிங்கமோ சிந்தாதிரிப்பேட்டை குத்துச்சண்டை மாவீரர் மதுரைச் செட்டியாரிடம் பயிற்சி பெற்ற இரண்டாவது வாரிசு. முதல் வாரிசு கட்டவுட் காளப்ப நாயக்கர்.

கித்தேரி முத்துவும் மதுரைச் செட்டியாரும் கூட ஒரு முறைக்கு இரு முறை மோதிப் பார்த்தாகிவிட்டது. ஆனால் இந்தச் சாந்தலிங்கத்தையும் ராஜமாணிக்கத்தையும் மோதவிட்டு வேடிக்கை பார்க்க முனைகிற முயற்சிகள் அனைத்துமே 'நாக்கவுட்' பெற்று விடுகின்றனவே...

இந்த இனிமையான நேரத்தில்தான் ராஜமாணிக்கமும் கனகமும் கண் ஜாடை வயப்பட்டு, பின் காதல் வயப்பட்டு, மண மேடையில் வாழ்வைச் செப்பனிட்டுக் கொள்ள எத்தனிக்கிறபோது...

சாந்தலிங்கத்துக்கே முறைப் பெண்ணான கனகத்தை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்திச் சிலர் கலகம் மூட்டிக் காரியங்களைச் சாதிக்க முனைந்தனர்.

கனகத்தின் அழகில் — அவள் கட்டுமஸ்தான உடலில் சாந்தலிங்கம் மயங்கி ஏங்கியவன். இப்பேர்ப்பட்டவளைத் தனது நண்பன் காதலித்தது, ஏதோ தன்னையே பகைத்துத் தனக்கே துரோகம் விளைவிப்பது போன்ற சினத்தைத் தூண்டியது என்று சொல்வதைக் காட்டிலும் தூண்டி விட்டார்கள் பந்தயப் பேர்வழிகள்.

இதன் விளைவு?



கனகம் சாந்தலிங்கத்தின் மனைவியானள். கட்டாயப்படுத்தப்பட்ட அந்தத் திருமணத்தால் யார் என்ன லாபம் கண்டார்களோ...

கனகம் கண்ணீரைப் பெற்றாள். சாந்தலிங்கம் சந்தேகத்தால் அலை மோதினான். அவ்விதமாக அலைமோதச் செய்யவும் ஒரு கும்பல் வேலை செய்தது. அவனது காதுகளுக்கு எட்டுகிற மாதிரி சில பல கசப்பான —கண்ணராவியான வார்த்தைகள்...

''இவனுக்குப் பெண்ணு கிடைக்கவில்லை? போயும் போயும் கனகத்தை மணந்தானே!''

—மணக்கச் சொன்னவர்களே மனவால் கயிறு திரித்தார்கள்.

—வாழ்க்கையப் பிணைக்கச் செய்தவர்கள் வாய்க்கு ருசியாகவும் ருசியற்றதாகவும் பிலாகித்தனர்.

இதன் எதிரொலி...

ஓராண்டுக்குள் கனகத்துக்கு உற்சாகமான வாழ்க்கை அமைவதற்குப் பதிலாக உதை குத்துத்தான் மிஞ்சியது.

சாராயத்தைக் குடிக்காதவரை வாய் பேசும்... சாராயம் ஏறிவிட்டால் கைபேசும்.

போதையின் வெறிப் பிடியில் அவனை— கனகத்தை ஒரு மனைவியின் அந்தஸ்துடன் படுக்கைக்குக் கௌரவ மளிக்க மாட்டான்.

தனது தலைவிதி இவ்விதமாக அமைந்தாலும் இது குறித்துக் கனகம் வெளியில் புலம்பிக் கொள்வது கிடையாது. மனத்தளவில் புழுங்கினாள்.

இந்த நிலையில்தான் ஒரு நாள்...

ராஜமாணிக்கம் கேட்டு விட்டான். ''ஏண்டா! அவளை இம்சை செய்யவா என்னிடமிருந்து பிரித்தாய்?''

''அதைக் கேட்க நீ யார்?''

''உன் பழைய நண்பன்!''

''நல்ல வேளை அவளது பழைய கணவன் என்று சொல்லாமல் விட்டாயே..!''

ஆ! ராஜமாணிக்கத்துக்கு வந்த கோபம்..

''தூ....''

இவ்வளவே...

இந்தக் காறியுமிழ்ந்த ஒரே காம்ப்பினை வைத்துக் கொண்டு ஊதி நெருப்பாக்கி,, இப்போது 'ஜதை'க்கும் ஆயத்தப்படுத்தி விட்டனர். சேராத ஜோடிகள் சேர்ந்து சண்டையிடப் போகின்றன.. சென்னை வீதிகளில் மூலைக்கு மூலை சுவரொட்டிகள்...

நடிப்பு: திரு வினோத், திரு அசோக், திரு டேவிட் ஜேம்ஸ்

சாந்தலிங்கத்துக்கும் புத்தி வருகிறமாதிரி புரட்டி எடுக்க வேண்டும் என்கிற ஆவேச வெறியுடன் பயிற்சி செய்து கொண்டிருந்தான் ராஜமாணிக்கம்.

மாலை முயற்சி செய்யப் போகிற 'பாயிண்டு'களைவிட 'நாக்கவுட்'டே சிறந்தது என்று பயிற்சி எடுத்துக் கொண்டிருந்த வேளையில் தான் கனகம் உள்ளே நுழைந்தாள்.

''கனகம்! எதுக்காக இங்கே வந்தே? உன் புருஷன் துரத்திட்டானா?''

—ராஜமாணிக்கம் துடிதுடிப்புடன் கேட்டான். அதுவரை எடுத்த பயிற்சி எல்லாம் மறைந்து ஏதோ ஒரு பலவீனம் தலைதூக்குகிற மாதிரி உள்ளுணர்வு.

''இன்னிக்கு நீங்க ஜெயிச்சா நானைக்கு அவர் என்னைத் துரத்தர மாதிரிதான்.''

''என்னது?''

பயில்வான்: நேத்து நடந்த குத்துச் சண்டைப் போட்டியிலே, எதிரிக்கு நிறைய குத்து விட்டேன்.

நண்பர்: எத்தனை குத்து விட்டிருப்பீங்க?

பயில்வான்: அவ்வளவு சரியாச் சொல்ல முடியாது.

நண்பர்: சரி... ஒரு குத்து மதிப்பாதான் சொல்லுங்களேன்.

எம். ஏ. அப்துல் காதர்



''ராத்திரி எனக்குச் செம உதை! நான் தான் அவர் கூட ஜதை செய்யச் சொல்லி உங்களைத் தூண்டி விட்டேனாம்...''

''அடப் பாவி! நீ என்னை ஏறெடுத்துப் பார்த்தே எத்தனையோ நாளாச்சே...''

''அது அவருக்குப் புரியணுமே! நாம அடிக்கடி சந்திக்கிறோமாம். தாம்பத்தியமும் நடத்துறோமாம். பலபேரு கண்ணாலே பார்த்ததாகவும் சொன்னாங்களாம். இன்னிக்கு அவரு ஜெயிச்சிட்டா, இனிமே அவரு ஏசிப் பேச மாட்டாராம்... கைநீட்டி அடிக்கமாட்டாராம்!''

''உன்னை அடிப்பானா கனகம்?''

''நான் கூச்சம் நாச்சம் இல்லாதவளா இருந்தா துணியை விலக்கியே காட்டிடுவேன்.... பல இடத்திலே அவரு பிடித்துண்டாலே என் மார்பு முதல் அங்கம் பூராவும் கட்ட வடுக்கள் நெறைய இருக்கு. காலை ஊனி நடக்கிறேனே அது அவரு உதைச்சதாலே வந்த முறிவுதான்...''

''மடையன்! இன்னிக்கு அவன் கையை உடைச்சிடறேன்!''

ராஜமாணிக்கத்தின் பற்கள் நறநறக்கின்றன...

அந்த நறநறப்பு ஓய்வதற்குள் கனகம் அவன் கால்களில் விழுந்து விட்டாள்.

''எனக்கு வாழ்வு கொடு ராஜு! நான் அவருகிட்டே திட்டும் அடியும், உதையும் சூடும் வாங்காம இருக்கணும்னு நீங்க இன்னிக்கு நடக்கப் போகிற ஜதையிலே தோக்கணும். எனக்காக உங்க வீரத்தை விட்டுக் கொடுங்க! எத்தனையோ ஜதையிலே 'வீர சண்டமாருதம்'னு பேர் வாங்கி 'கப்' வாங்கியிருக்கீங்க... இந்த ஜதையிலே உங்க பழைய எதிரிகிட்டே தோற்கறீங்க... ஒரு பெண்ணுக்கு வாழ்வு தரத்துக்காக.''

விழுந்தெழுந்த கனகம் வீங்கிய கன்னமும் விழுங்கிய கண்களுமாக வேண்டி நிற்கிறாள்.

நிரம்பவும் தருமசங்கடமான சிந்தனையில் லயித்துப் போன ராஜமாணிக்கம் வெகுவாகச் சிந்திக்கிறான். சாந்தலிங்கத்தைப் பழி வாங்கத்துடித்த எண்ணத்துக்குக் குறுக்கே வந்து நின்று விட்டாளே கனகம்!

''கனகம்! நான் தோத்துட்டா அப்புறம் உன் புருஷன் உன்னை அடிக்க மாட்டான்; திட்ட மாட்டான்னு என்ன நிச்சயம்?''

''சத்தியம் பண்ணிக் கொடுத்து இருக்காரு!''

''முரடன் சத்தியம் முக்கால் நாழிகை கூட இருக்காது.''

''இல்லே... அவர் தொழில் மேலேயும் சத்தியம் வைத்தார். கிளவுஸை எடுத்து வைத்து அதைத் தொட்டும் சத்தியம் பண்ணினாரு.''

''என்கிட்டே போட்டி போட்டா தோத்துப் போவோம்கிற பயம் இருந்து ஏன் கை கொடுக்கணும்?'' (கை கொடுப்பது என்பது குத்துச் சண்டை ஆரம்பத்துக்கு ஒப்புதல் தெரிவிப்பது)

''எல்லாம் பலருடைய தூண்டுதல். உங்களை ஜெயிக்கணும்கிற வீரப்பேராசை.''

''நான் தோத்துட்டா எனக்கு அவமானம் வராதா?''

ஒரு கணம் உற்றுக் கவனித்துக் கண்ணீர் மல்குகிறாள் கனகம். ''நீங்க ஜெயிங்க! நானே எனது சாவிலும் ஒரு பிடி மண்ணை அள்ளிப் போடுங்க!''

அவள் கண்களைத் துடைத்துக்கொண்டு வேகமாக வெளியேற முனைகிறபோது...

''கனகம்!''

நின்று திரும்பிக் கவனிக்கிறாள் கனகம்.

''என் தோல்வியின் மேல் உனக்கு ஒரு சந்தோஷமான வாழ்க்கை கிடைக்கும்னு நீ நம்பி எதிர்பார்க்கிறது நிஜம்னா... நான் தோத்துடறேன்... ஆனால்... அவனுக்கும் 'பாயிண்டு'களை அதிகரிக்கச் செய்தாலும்

என் பகையைத் தீர்க்க 'பஞ்சுகள்' பயங்கரமாக விழும்.''

அவள் கரம் கூப்புகிறாள்.

''எப்படியாவது செய்யுங்க! உங்க விருப்பம்... ஏடாகூடமாக எதுவும் நடந்துடக் கூடாது.''

முந்தானையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு கனகம் வெளியேறினாள்.

அன்று மாலை ஸ்டேடியத்தில் கூட்டம் வழிந்து நிறைகிறது.

குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கப்பெற்ற சின்னச் சின்ன ஜதைகள் முடிந்ததும் பெரிய ஜதை ஆரம்பமாகப் போகின்றது என்கிற செய்தி அறிந்து ஜனங்களிடையே பரபரப்பான கோஷங்கள் கிளம்புகின்றன.

கைதேர்ந்த 'ரெஃப்ரி' மேடை ஏறுகிறார். ஒரே கரகோஷம். பின்னர் ராஜமாணிக்கமும், சாந்தலிங்கமும் மேடை ஏறுகின்றனர். வானைக் கிழிக்குமளவுக்கு வீர கோஷங்கள்.

இருவருக்கும் கிளவுககள் மாட்டப்படுகின்றன.

ஒரு கணம் தனது குருவான கித்தேரி முத்துவை 'நினைத்து வழிபட்டுக் கொள்கிறான்: 'என்னை மன்னித்துவிடுங்கள்; ஒரு பெண்ணின் கண்ணீருக்காக நான் தோற்பது ஒரு தோல்வி ஆகாது; அது ஒரு தியாகம்.'

மணி அடிக்கப்பட்டது.

எடுத்த எடுப்பில் முதல் குத்து ராஜமாணிக்கத்துடையது.

ஆ! பொறி கலங்கிப்போனான் சாந்தலிங்கம்.

எந்த விதக் கெட்ட பழக்கமும் பெண்ணாசையுமற்று வளர்த்த பலமல்லவா?

முதல் ரவுண்டில் ராஜமாணிக்கத்தின் பாயிண்டுகள் அதிகரித்து விட்டன.

அடுத்த ரவுண்டு ஆரம்பம்.

ராஜமாணிக்கம் தனது குத்துப் பிரயோகங்களைப் பலமாகவே செலுத்தி எதிரியைத் திண்டாட வைக்கிறான். அவனது சார்பு பற்றிய ரசிகர்கள் பெருங் கோஷமெழுப்புகிறார்கள்.

மூன்றாவது ரவுண்டு.

எப்படியும் ராஜமாணிக்கமே வெல்வான் என்கிற எண்ணம் சந்தேகமற எழுகிறது.

ஆனால்....

பல சந்தர்ப்பங்கள் 'நாக்அவுட்'டுக்காகக் கிடைத்தும் அதனை இவன் ஏன் தவற விட வேண்டும்?

கனகத்தின் கண்ணீர் முகம் கண்ணில் தெரிகிறது.

சாந்தலிங்கத்தின் பாயிண்டுகள் அதிகரிக்கின்றன.

ஓ... ராஜமாணிக்கம் தோற்றுவிட்டான்.

மக்களிடையே இந்தத் தோல்வியை ஒப்புக்கொள்ள முடியாத களேபரம்...

வெற்றி வீரனாகப் பரிசுப் பொருள்களைப் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினான் சாந்தலிங்கம்.

அன்றிரவு...

நன்றாகக் குடித்துவிட்டுக் காம இயந்திரமாக்கப்பட்ட மனைவி கனகத்தை விழிகள் சிவக்க நோக்குகிறான்.



நாதிர் ஒரு நாள் அவரது மந்திரி நிஜாமுல் முல்க் என்பவருடன் பள்ளிவாசலுக்குச் சென்று தொழுதுவிட்டுத் திரும்பினார்.

கல்தான்: மந்திரி! இப்பொழுது போர் நடக்கப் போகிறதே. நீர் இறைவனிடம் எவ்விதமான பிரார்த்தனை செய்தீர்?

மந்திரி: கல்தானே! உங்களுக்கு வெற்றி கிடைக்க வேண்டும் என்று நான் இறைவனிடம் பிரார்த்தனை செய்தேன்.

கல்தான்: நான் அப்படிப் பிரார்த்தனை செய்யவில்லை. மக்களை ஆட்சி செய்வதில் எவருக்குத் திறமை இருக்கிறதோ, அவருக்கே வெற்றி கொடுக்கும்படி இறைவனைப் பிரார்த்தித்தேன்!

ஆதாரம்: ''பாரசீகக் கதைகள்'' என்ற நூல்

நகவல்: கணியூர் பாரூக்

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

''கனகம்! நீ ராஜமாணிக்கத்தோட வீட்டுக்குப் போனியா?''

''ஆமாம்.''

''எதுக்கு?''

''அவரைத் தோத்துடும்படி மன்றாடிக் கேட்டுக்கிட்டேன். உங்க ஆசை நிறைவேறிடுச்சு... என்னை அன்பா வைச்சுக்கு விங்கன்னு நினைக்கிறேன்!''

''எப்படிடீ வைச்சுக்க முடியும்? அவனாவது தோக்கறதாவது... என்னை வஞ்சம் தீர்க்கத்தான் எடுத்த எடுப்பில் விட்டானே ஒரு குத்து... உன்னை அனுபவிக்கத் தோத்துடறதாச் சொல்லி அனுப்பிச்சிட்டான். இந்தச் சாந்தலிங்கத்துக்கிட்டயா முடியும்? கடைசி ரெண்டு ரவுண்டுலே அவனைப் புரட்டி அடிக்கலேன்னு அவன்தான் ஜெயிச்சு இருப்பான்.... சூப்பர் பாயிண்ட் சாந்தலிங்கம்டி நான்.'' என்று கூறிக் கொண்டே பீடியை நன்றாக இழுத்துப் புகையைக் கக்கி, அந்த நெருப்பை எடுத்துக் கனகத்தின் உதடுகளில் அழுத்துகிறபோது...

'ஓ'வென்று பெருங் கூச்சல் போட்டுவிட்டாள்.

''இந்த உதடுதானே அவனுக்குப் பயன்பட்டுத் தோத்துடும்படி சொன்னது...''

''ஐயோ என்னை விட்டுடுங்க!''

''விடறதாவது... நட்டைக் கழற்றி, மிஷினை ஓட்டற சாமர்த்தியக்கார மெக்கானிக்குடி நான்!'' என்று கூறிக்கொண்டே விட்ட உதை...

வீல் என்று அலறியவாறு ஒரு மூலையில் போய் விழுந்தாள் கனகம். அவளை மீண்டும் கனன்ற கண்களுடன் நெருங்கிய சாந்தலிங்கம்....

முரடன் சத்தியம் முக்கால் நாழிகை.

ஓ....ஒரு வீரன் அநியாயமாகத் தோற்று விட்டான்!


இரட்டை அங்கத்தினர் பிரச்னை தீர்ந்தால் நாம ரெண்டு பேரும் இணைஞ்சுடலாமுங்க!
ஜனதா (எஸ்)
ஜனதா




உங்க ஆதரவு இருந்தால் நாங்க எங்களாலே ஸ்திரமான அரசு அமைக்கமுடியும்!
ஸ்திரமான அரசுக்குத்தான் நான் ஆதரவு கொடுக்க முடியும்!




கல்கி

1979 ஆகஸ்டு 19

சித்தார்த்தி ஆவணி 3

மலர்: 38 இதழ்: 3




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற – எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா – பாரதியார்.

# ஒரு பகிரங்கக் கடிதம்

திரு எம். ஆர். மசானி இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் ஒரு பகிரங்கக் கடிதம் எழுதியுள்ளார். எக்ஸ்பிரஸ் ஆசிரியரின் கட்டுரை ஒன்றின் அடிப்படையில் அவர் வரைந்துள்ள கடிதம் இந்தத் தேசத்தின் எதிர்காலம் பற்றிக் கவலை கொண்டுள்ள அனைவருக்கும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

ஒரு பக்கம் பதவி ஆசை காரணமாக ஜனதா(எஸ்), காங்கிரஸ் கூட்டு நடத்துகிற பரிகாசத்துக்குரிய நாடகம்; இன்னொரு பக்கம் இந்த ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு மறுபடியும் பதவிக்கு வரத் துடித்துக் கொண்டிருக்கும் ஜனதா. இவற்றில் எதை உத்தமம் எனக்கொள்வது? ஒன்றைப் பார்க்க ஒன்று மோசம். இரு தரப்பினருமே பதவி மோகம் காரணமாக இந்திரா காந்தியின் துணையை நாடும்போது இந்திராவின் கரம் பலப்படுத்தப்படுகிறது. அவர் மறுபடி அரங்கின் மையத்துக்கு வந்து அனைவரையும் ஆட்டிப் படைக்க ஆரம்பித்துவிட்டார்.

யாருமே ஸ்திரமான நல்லாட்சியை வழங்க முடியாத நிலையில் மீண்டும் பொதுத் தேர்தல் நடந்தாலும் நிலைமை வெகுவாக மாறப் போவதில்லை. 'இந்திராவின் சர்வாதிகாரமா? ஜனதா அல்லது ஜனதா(எஸ்)ஸின் குழப்படி அரசியலா? எது மேல்?' என்ற கேள்விகள்தான் மறுபடியும் தலைதூக்கும்.

மூன்றாவதாக ஒரு மார்க்கம் இருப்பதை நாம் மக்களுக்கு உணர்த்தக் கூடாதா? சர்வாதிகாரம் அற்ற, ஆனால் கட்டுப்பாடுடன் கூடிய ஜனநாயகத்துக்கு வழியமைக்க முடியாதா? குறைந்தபட்ச அதிகாரங்களுடன் விளங்கி, தனக்கேற்பட்ட சரியான கடமைகளை மட்டும் நிறைவேற்றி, மக்களுக்கு அதிகபட்ச சுதந்திரத்துடன் தொழில் செய்து முன்னுக்கு வர வாய்ப்புத் தரும் ஒரு சுத்தமான அரசு அமைவது பற்றிச் சிந்திக்கலாமே?

அரசியலையே தொழிலாகக் கொண்டவர்கள் தவிர இந்நாட்டில் புத்திசாலிகளான தேசபக்தர்கள் பல்லாயிரக் கணக்கில் இருக்கிறார்கள். அவர்கள் இது போன்ற ஒரு நல்ல தீர்வு காண ஏங்குகிறார்கள். ஆனால் இவர்கள் தேசப் பணியாற்ற விரும்பிய போதிலும் என்ன செய்வது, யாரிடம் யோசனை கேட்பது என்று புரியாமல் தவிக்கிறார்கள்.

இத்தகையவர்களின் சக்தியை யெல்லாம் ஒன்று திரட்ட ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ள வேண்டும். இதற்கு வசதியாக திரு எம். ஆர். மஸானி நூற்றுவர் குழு ஒன்று அமைத்து அதன் விலாசத்தையும் தந்திருக்கிறார்;

**Honorary Secretary**
**The Committee of a Hundred,**
**Maneckjee Wadia Building (Fourth Floor)**
**127, Mahathma Gandhi Rd.,**
**Bombay-400 023**

மேலே விவரித்த அம்சங்களில் பரவலான கருத்தொற்றுமை உடையவர்கள் இந்த விலாசத்துக்கு எழுதுவதுடன் தேசத்தைக் காப்பாற்றும் முயற்சியில் தங்களால் என்ன பணியாற்ற முடியும் என்றும் குறிப்பிடலாம்.

திரு மஸானியின் இந்த மனப்பூர்வமான நன்முயற்சிக்குக் கல்கி வாசகர்கள் ஏகோபித்த நல்லாதரவு தருவார்கள் என நம்புகிறோம்.

துர்நாற்றம் பிடித்த சுயநல அரசியல் தூர விலக வேண்டுமென்றால் அறிவாளிகளான தன்னலமற்ற தேசபக்தர்கள் ஒன்று சேர்ந்துதான் ஆக வேண்டும். இவர்கள் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமென்பது கூட இல்லை. இப்படி ஓர் அமைப்பு ஏற்பட்டு மக்களின் செல்வாக்குடன் கூடி நம்மைக் கண்காணிக்கிறது என்ற எண்ணமே அரசியல்வாதிகளிடையே ஓர் ஆரோக்கியமான மாற்றத்தை உருவாக்கும்.

# Kalki Shopping Page

## HMV STEREO 3131 SUPERTRACK

Magnetic cartridge with diamond stylus.




## HMV STEREO 1010





**HMV STEREO SYSTEMS**


**HMV STEREO SYSTEMS**

**POPPAT JAMAL & SONS**
36-B, Mount Road
Madras-600002
Ph: 88532

**LAKSHMI MUSICALS**
(Air-Conditioned)
61, Usman Road
Madras-600017
Ph: 444629, 442290

**VIVEK & CO**
Purasawalkam, Madras-600007
Ph: 662462/663545
Mylapore, Madras-600004
Ph: 76923/75661

# STANDARD

## Solid State TV




பேர்பெற்ற டிவிகளின்
பெயர்களை தெரிந்து
வைத்து இருப்பது என்பது
ஒன்று.
நிகழ்ச்சியைப் பார்த்து
தரத்தை அறிவது என்பது
மற்றொன்று.

ஸ்டாண்டர்டு டிவி தன் பெயருக்கு
ஏற்றவாறு தரமுள்ளதாக இருக்கிறது.

சுலப
தவணை முறையில்
கிடைக்கும்

# STANDARD TV

பெயருக்கேற்ற தரமுள்ள டிவி;

**M/s KUNDANMALS RADIO HOUSE**
165/168, Devaraja Mudali Street
Madras-600001. Ph: 30321

**M/s TELSTAR**
8, Nungambakkam
High Road
Madras-600034 Ph: 82910

**M/s POLESTAR ELECRRONICS PVT LTD**
13, G. P. Road
Madras-600002 Ph: 810860

# Kalki Shopping Page

## Beauty **with HAL*brains**

(*Hindustan Aeronautics Limited)

# Bharat TV



*Available at:*

| VIJAYA'S | LAKSHMI MUSICALS | RAJA RADIO & ELECTRICALS |
|---|---|---|
| Adyar | T. Nagar | Royapettah |
| Ph: 74579 | Ph: 444629 | Ph: 841533 |

## SUKI ELECTRONICS

Best Place to Choose your

**STANDARD**

**televista**

**Solidaire** TV sets



Available on cash or easy instalment

Cost of Antenna, installation & delivery charges free for cash purchases.

**SUKI ELECTRONICS**

16, Veeraraghavan Street,
Nanganallur,
Madras 600 061.

C-3, Kapaleeswarar Shopping Complex, V.A. Road,
Near Saibaba Temple
Mylapore, Madras 600 004.

Phone: 433019.




Available at

**VIVEK & CO**

Luz, Mylapore
Phone: 75661, 76923
Purasawalkam High Road Madras
Phone: 662462, 663545

# Kalki Shopping Page

பண்டிகை பருவங்களில் அணியும் பகட்டான ஆடை அணிகளுக்கும் கலியாணம், ஆண்டுவிழா, பிறந்தநாள் போன்ற குதூகலமான குடும்ப விழாக்களுக்கு விதவிதமான பட்டு, பருத்தி மற்றும் வித்தடிக் ஜவுளி வகையறுக்களுக்கு நம்பகமான-நாகரிகமான இடம்

## சந்தோஷ்

**பாரதத்தின் தலைசிறந்த அனைத்துமில் ஆடைகளின் இருப்பிடம்**

விதவிதமான டிசைன்கள் -
விலை மலிவு - தரம் உயர்வு.

**விழுப்புரத்திலுள்ள ஓரே**
**ஏர்கண்டிஷன் ஜவுளி ஷோரூம்**

**சந்தோஷ் எண்டர்பிரைசஸ்**
பாம்பே டையிங் ஷோரூம்
(போன் : 516)
151, காந்தி ரோடு, விழுப்புரம்-605602

**தீபாவளிக்கு புத்தம் புதிய டிசைன்கள்**

ஆடவரும் பெண்டிரும் அணிந்து
மகிழ எழில் கொஞ்சும்




புராக் மார்க் துண்டுகள் கைக்குட்டைகள்

* கண்ணைப் பறிக்கும் வண்ணங்கள்
* கவர்ந்திழுக்கும் கட்டங்கள்
* எடுப்பான தோற்றம்
* உறுதியான சாயம்

**V. G. L. கம்பெனி**
கடலூர் துறைமுகம் 607003
போன் : 545

புதிய ஷோ ரூம் : 86 லாரன்ஸ் ரோடு
திருப்பாப்புலியூர்
கடலூர் 607002 போன் : 896



கூந்தல் வளர்ச்சிக்கு சிறந்தது!

## நீலிபிருங்காதி தைலம்

**ஆனந்தா வைத்தியசாலை**
பழனி தமிழ்நாடு
கிளை: 69, கச்சேரி ரோடு, மைலாப்பூர், சென்னை-4
சுபேதார் சத்திரம் ரோடு, பெங்களூர்-9

ANNA

# கடல் ராணி

## சாண்டில்யன்

### முன் கதை

தீந்து துர்க்கத்தைச் சூழ்ந்த கடலிலே, பொங்கிப் பூரிக்கும் அலைகளோடு விளையாடியவாறு நீந்திக் களித்துக் கொண்டிருக்கிறாள் கட்டழகி யொருத்தி. குளித்து முடித்த அந்தக் குமரி பாறைகளுக்குப் புறம்பே இருந்த ஒரு பாழடைந்த கட்டிடத்துக்கு உடை மாற்றிக் கொள்ளப் போகிறாள். அங்கு அவள் அறையில் அவள் கட்டிலில் ஓர் இளைஞன் கண்ணயர்ந்து கொண்டிருக்கிறான். கோபமடைந்த அந்த அழகி அவனை எழுப்பி வெளியே விரட்டிவிட்டு மாற்றுடை அணிய முற்படுகிறாள். அப்போது இரு வெள்ளையர்கள் அவளைத் தேடி வந்து வாசலில் அரைத் தூக்கத்திலிருந்த இளைஞனை அவமதித்துப் பேசியபோது அந்த இளைஞனின் துப்பாக்கி மின்னலாக இயங்கி வெள்ளையர்களைக் காயப்படுத்துகிறது. வெள்ளையர்கள் மூலம் நீராடி வந்த அழகியின் பெயர் கடல் ராணி என அறிகிறான் இளைஞன். வெள்ளையர்கள் இளைஞனை அவள் கூட்டாளி என்று நினைக்கின்றனர். அவள் தனக்கு அவனைத் தெரியாதென்கிறாள். தங்களைக்காட்டிக் காயமடையச் செய்தது கடல் ராணி என்று நினைத்திருந்தனர் வெள்ளையர். ஆனால் தான் கடலில்லை என்று அவள் கூறியபோது அசடு போலிருந்த அந்த வாலிபனை வியப்போடு பார்க்கிறார்கள். அந்தச் சோம்பேறி இளைஞன் சாவதானமாக எழுந்து ரத்தம் ஒழுகிக் கொண்டிருக்கும் அவ்விருவரின் காயங்களுக்கும் பக்குவமாகக் கட்டுப் போட்டு அவர்களைப் பாண்டவர் கோட்டைக்கு அழைத்துப் போகலாம் என்கிறான் கடல் ராணியிடம். அதைக் கேட்ட அவள் அதிர்ச்சியடைகிறாள். அங்கு கொண்டு போவதன் அபாயத்தை விவரிக்கிறாள். ஆனால் இளைஞனோ பிடிவாதமாக அவர்களைக் காப்பாற்றப் பாண்டவர் கோட்டைக்குக் கொண்டு போயே ஆக வேண்டும் என்கிறான். நீந்த முடியாத அவர்களை எப்படி அழைத்துச் செல்வது? இதோ படகு உள்ளது என்று கூறி எல்லோரையும் கூட்டிப் போகிறான். அவன் காட்டியதோ கடல் ராணியின் படகு. 'இதை எங்கிருந்து திருடினாய்' என்று கோபத்துடன் கேட்கிறாள் அந்தக் குமரி. 'நீ கட்டி வைத்த இடத்திலிருந்து' என்கிறான் இளைஞன். 'நீ யார்?' என்று அவள் சீற்றத்துடன் வினவ அவன் தன் பெயரைக் கூறியதும் ராணி பிரமித்து வியந்தாள். வெள்ளையர்களோ அச்சமும் அதிர்ச்சியும் அடைந்தனர். அங்கு அவர்கள் அவனை எதிர்பார்க்கவில்லை. யார் அவன்?

படியுங்களேன் மேலே.

## அத்தியாயம் 3

# கனவில் ஒரு திருப்பம்

கடல் ராணியின் வியப்புக்கும் மற்ற இருவரின் கவலைக்கும் அச்சத்துக்கும் காரணமாயிருந்த அந்தப் பெயர் மகாராஷ்டிரத்தில் மிகப் பிரபலமாயிருந்தும், அந்தப் பெயருக்குடையவன் அத்தனை வாலிபனாகவோ சுத்த சோம்பேறியாகவோ இருக்க முடியுமென்பதை மூவருமே எதிர்பார்க்காததால் மூவரும் பல விநாடிகள் பிரமை பிடித்து நின்றுவிட்டார்களானாலும், மூவரில் முதலில் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்ட ராணி மட்டும் வினவினாள்: ''உங்கள் பெயர் என்னவென்று சொன்னீர்கள்?'' என்று.

தனது பெயரைக் கேட்டதும் அம்மூவரின் முகத்திலும் விரிந்த உணர்ச்சிகளை அரைக் கண்களாலேயே கண்ட அந்த வாலிபன் இதழ்களில் இளநகை இலேசாக விரிந்தது. ''அனந்த். இந்திரஜித் அனந்த்'' என்று தனது பெயரின் பாதியை முதலிலும் முழுப் பெயரை இரண்டாம் முறையும் மிகுந்த சங்கோஜத்துடன் சொன்னான்.

அந்தப் பெயருக்குடையவன் புகழுக்கும் நடத்தைக்கும் சம்பந்தம் இல்லாதிருப்பதை எண்ணிப் பார்த்த கடல் ராணி ''எந்த அனந்த் நீங்கள்? துலாஜி ஆங்கரேயின் நண்பரா?'' என்று வினவினாள்.

அனந்தின் கண்கள் சற்றே மேலெழுந்தன. ''ஆம்'' என்றான் சர்வ சாதாரணமாக.

அவன் சொற்களிலோ நடத்தையிலோ எந்த வித உணர்ச்சியும் இல்லாவிடினும் இரண்டு வெள்ளையர்களின் முகங்களில் அச்சம் மிதமிஞ்சிக் கிடந்தது. ''இவனை நாங்கள் நம்பமாட்டோம்'' என்றான் கையில் ரவை பாய்ந்த வெள்ளையன்.

''இவன்தான் *சுந்தா ராஜாவின் புரவிப் படைக்குத் தலைமை வகித்துக் காற்று வேகத்தில் வந்தான். பிரிட்டிஷ் படையில் பெரும் பான்மையை அழித்து விட்டான்'' என்றான் இரண்டாவது வெள்ளையன்.

இதைக் கேட்ட ராணியின் முகம் பழையபடி தாமரையென மலர்ந்தது. ''அதைப்

---

*சுந்தா என்பது வட கன்னடத்தில் அரபிக் கடலை யொட்டியுள்ள சமஸ்தானம். இப்பொழுது ஸோந்தா என்று அழைக்கப் படுகிறது.



பற்றி நானும் கேள்விப்பட்டேன். பாரதப் போர் சரித்திரத்தில் அது நிரந்தரமான இடம் பெறும் என்று சிந்து தூர்க்கத்தில்கூடப் பேசிக் கொண்டார்கள். நீங்கள் செய்தது மிகுந்த சாகஸச் செயல்'' என்ற ராணியின் குரல் மிக மதுரமாயிருந்தது.

அவள் பாராட்டுதலையோ, வெள்ளையரின் குற்றச்சாட்டுகளையோ அனந்த் ஒப்புக்கொண்டதாகத் தெரியவில்லை. ''அது அகஸ்மாத்தாக ஏற்பட்ட தவறு. அந்தப் போரில் நான் ஈடுபடவே நினைக்கவில்லை. வெள்ளைக்காரர்கள் கார்வார் பகுதியில் சில கிராமங்களைக் கொளுத்தி விட்டார்கள் என்று கேள்விப்பட்டு விஜயதுர்க்கம் செல்லவேண்டியவன் அந்தப் பக்கம் திரும்பினேன். கடற்கரையில் பிரிட்டிஷ் கப்பல்கள் நின்று கொண்டிருந்தன. படகுகளில் வீரர்கள் இறங்கிக்கொண்டிருந்தார்கள். சுந்தா ராஜாவின் புரவிப்படை மிகச் சிறியதாயிருந்தது. ராஜாவிடம் நானே அணுகிக் கேட்டேன், உங்கள் படையை நான் நடத்தட்டுமா என்று. ராஜா சம்மதித்தார். ஆனால் எனக்கு பிரிட்டிஷார் அதிக வேலை வைக்கவில்லை. பாதிப் பேர் குடித்து மயக்கமாயிருந்தார்கள்.. அவர்கள் தலைவன் குடித்திருந்ததால் மயக்கம் போட்டுக் கடலில் விழுந்து விட்டான். படையெடுக்க வந்த படகுகள் கவிழ்ந்தன. தரையில் ஓடிவந்த சிலரைத் தாக்க வேண்டியதாயிற்று. அவர்கள் தலைவனைக் கடலிலிருந்து நானே தூக்கித் தரையில் போட்டேன். அதைப் போர் என்று சொல்ல முடியாது'' என்று மெள்ள விவரித்த அனந்த் அதற்குமேல் கதையை வளர்த்த இஷ்டப் படாவிட்டாலும் கையில் ரவை பாய்ந்த வெள்ளைக்காரன் விடவில்லை.

''இவர் சொல்வது போல் அந்த வெற்றி அகஸ்மாத்தாக ஏற்பட்டதல்ல. பிரிட்டிஷ் படைகள் தரையில் இறங்கும்வரை வாளாவிருந்துவிட்டு, பீரங்கிகளையும், எங்கள் துப்பாக்கிகளையும் அலட்சியம் செய்து திடீரெனப் பாய்ந்து வருவது அத்தனை சுலபமல்ல. அன்று நடந்தது சம்திங் பிரில்லியண்ட், எக்ஸ்ட்ராார்டினரி'' என்று மகாராஷ்டிரத்திலும் ஆங்கிலத்திலும் கலந்து பேசினான்.

இன்னொருவனும் அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான். இருவர் முகத்திலும் ஈயாடவில்லை.

அப்பொழுது அனந்த் முகத்தில் சிறிது வெறுப்பைக் காட்டினான். "காப்டன் ஸ்டான்டன், லெப்டினன்ட் ஸ்மித்! ஐ ஆம் ஒப்லைஜ்ட் டு யூ ஃபார் த காம்ப்ளிமெண்ட்" என்று கூறிவிட்டுக் கடல் ராணியை நோக்கி "நாம் புறப்படுவோமா?" என்று வினவினான்.

கடல் ராணி இரு வெள்ளைக்காரர்களையும் பார்த்தாள். "நான் இங்கிருந்து நகர மாட்டேன். ஐ வோண்ட் ஸ்டர் ஒன் இஞ்ச்" என்றான் காப்டன் ஸ்டான்டன்.

"என் கருத்தும் அதுதான்" என்றான் ஸ்மித்.

"ஏன்?" என்று வினவினான் அனந்த்.

"பாண்டவர் கோட்டையில் நாங்கள் தூக்கிலிடப்படுவோம். எங்கள் தலைகள் ஈட்டியில் குத்தப்பட்டுக் கோட்டை மீது நடப்படும். எங்கள் நண்பர்களுக்கு இந்தக் கதிதான் ஏற்பட்டது கார்வாரில்" என்று கூறிய ஸ்டான்டன் குரலில் மிதமிஞ்சிய கிலி ஒலித்தது.

அனந்தின் இதழ்களில் புன்முறுவல் மலர்ந்தது. "உங்களுக்கு எந்த விதத் தீங்கும் வராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று உறுதி கூறினான் வாலிபனான அனந்த்.

"கடல் ராணியைப் பிடிக்க மூன்றுமுறை முயன்று இன்று அவளையும் பிடிக்காமல் உன் கையிலும் அகப்பட்டுக் கொண்டோம். சிந்து தூர்க்கத்திலும் பாண்டவர் கோட்டையிலும் இவளை எல்லோரும் தங்களைக் காக்கும் தெய்வமாக நினைக்கிறார்கள். ஆகவே இந்தக்கோட்டையில் சிக்கினாலும் அங்கு சிக்கினாலும் எங்கள் கதி அதோகதிதான்" என்றான் ஸ்டான்டன்.

"கடல் ராணி உங்களுக்கு அபயமளிக்கிறான்" என்று காப்டனுக்குப் பதில் சொன்ன அனந்த் ராணியை நோக்கித் திரும்பி "என்ன ராணி?" என்று வினவினான்.

அவன் கேள்வி கேட்ட முறையிலும் குரலிலும் பார்வையிலும் ஏதோ ஒரு வசீகர சக்தி இருந்திருக்க வேண்டும். "ஆம், உங்களுக்கு எந்தத் தீங்கும் வராது" என்றுகடல் ராணியும் பதில் கூறினாளானாலும் 'இந்த வெள்ளையரை, அதுவும் என்னைக் கடத்திச் செல்லத் திருட்டுத்தனமாக வந்த அயோக்கியர்களை இவர் ஏன் காப்பாற்ற முயலுகிறார்' என்று தனக்குள் கேள்வியொன்றை எழுப்பிக் கொண்டாள்.

அதற்குப் பிறகு அனந்த் தனது சோம்பேறித்தனத்தை உதறித் துரிதத்தைக் காட்-



டலானான். படகில் ஏறும்படி இரு வெள்ளையருக்கும் உத்தரவிட்டு ராணியை அழைத்துக்கொண்டு படகில் ஏறித் துடுப்புக்களைத் தானே துழாவலானான்.

அப்படித் துழாவியவன் சற்றுப் பின்னால் நகர்ந்து கொண்டிருந்த சிந்து துர்க்கத்தையும் முன்னால் புலப்பட்ட பாண்டவகட் என்றும் பத்மனாப கட் என்றும் அழைக்கப்பட்ட பாண்டவர் கோட்டையையும் கண்டு மெய்மறந்தான். அந்த நிலையில் சொன்னான்: ''ராணி நீ பெரும் பாக்கியம் செய்திருக்க வேண்டும்'' என்று.

அந்த வாலிபனின் கண்கள் சென்ற திசைகளை ராணியின் அழகிய விழிகளும் கவனித்ததால், அவன் மனத்திலோடிய எண்ணங்களை அவள் புரிந்து கொண்டிருந்தாலும் புரியாதது போலவே கேட்டாள்: ''என்ன பாக்கியத்தைக் குறிப்பிடுகிறீர்கள்?'' என்று.

அனந்தின் கண்களில் கனவு விரிந்து கிடந்தது. கதிரவனின் கிரணங்கள் அலைகள் மீது தாவி அவற்றைக் கண்ணாடிகளாக அடித்துவிட்ட இந்திர ஜாலத்தையும் அவை கண் சிமிட்டிச் சிமிட்டி ராணியின் அழகைப் பிரதிபலிக்க முற்பட்ட விந்தையையும், சிந்து துர்க்கத்தின் பெரும் கோட்டையின் வட்டமான பீரங்கி நிலையங்களின் கம்பீரத்தையும், பாண்டவ கட்டின் பச்சைத் தோப்புக்களையும் வெள்ளி போன்ற மணல் கரையையும் கண்டு அவற்றில் மனத்தைப் பறிகொடுத்துக்கொண்டிருந்தானாதலால் அவன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. கடைசியாக மிக மெதுவாகப் பதில் சொன்னபோது அவனுக்கு அக்கோட்டைகளைப் பற்றி இருந்த அறிவு வியக்கத்தக்கதாயிருந்தது.

''இந்தக் கோட்டைகளின் ராணியாயிருக்கும் பாக்கியத்தைச் சொன்னேன்'' என்ற அனந்த் மேலும் சொன்னான்: ''ராணி! இந்த நாட்டில் ராமாயணம் இன்னும் மடியவில்லை'' என்று.

அவன் சொன்னதின் பொருள் அவளுக்குப் புரிந்துதானிருந்தது. என்றாலும் அவன் வாயாலேயே அதை வரவழைக்கக் கருதி ''ராமாயணமா?'' என்று வினவினாள், வியப்புப் பெரிதும் விரிந்த குரலில்.

அனந்தின் கரங்கள் படகை மெள்ளத் துழாவின. கண்கள் அரைவாசி மூடிக் கிடந்தன. சொற்கள் நிதானமாக உதிர்ந்தன. ''ராணி கடல் மீது அணை கட்ட ராமபிரான் கடலின் முன்பு சரணாகதிசெய்தான். அதை நாம் பார்த்ததில்லை. ஆனால் சத்ரபதி சிவாஜி இந்தக் கோட்டைகளுக்காகக் கடலரசன் முன்பு விரதமிருந்ததை அறிவோம். விரதத்தின் பலனாக இந்தத் தீவுகளைப் பெற்றார் மகாராஜா. ஜன்ஜீராவைப் பிடிக்கத்தான் அவர் அதோ தெரியும் ஸஹ்யாத்ரியில் ஏழு நாள் உபவாசமிருந்தார். ஏழாவது நாள் கடலரசன் அவர் கனவில் தோன்றி 'நான் இங்கு உனக்கு இடம் தருகிறேன்; ஜன்ஜீராவை விடப் பலமான கோட்டையைக் கட்டிக்கொள்' என்று வரமளித்தான். *மறுநாள் காலை மகாராஜா கண் விழித்தார். கடல் பின்வாங்கியிருந்தது. கடல் மட்டத்திலிருந்து இந்த மலைத் தீவுகள் மூன்றும் கடலுக்கு மேலே எழுந்திருந்தன. கடல் சூழ்ந்த இந்த மலைத் தீவுகளில் கோட்டைகளைக் கட்டினார் சத்ரபதி. இது புராணமல்ல, சரித்திரம் ராணி....'' இந்த இடத்தில் அனந்த் சிறிது பேச்சை நிறுத்தினான் உணர்ச்சி மிகுதியால்.

ராணியின் கண்களிலும் உணர்ச்சி மிகுதி மிஞ்சிக் கிடந்தது. ''மேலே சொல்லுங்கள்'' என்ற அவள் சொற்களும் குழைந்து கிடந்தன.

அனந்த் மேலும் சொன்னான்: ''அது மட்டுமல்ல ராணி! 'நீயாக இந்தக் கோட்டையைப் புறக்கணித்தாலொழிய இதை எந்த எதிரியும் பிடிக்க முடியாது. அப்படி வரும் எதிரியை நானே அழித்து விடுவேன்' என்றும் கடலரசன் கனவில் உறுதி கூறியிருந்தான் சத்ரபதிக்கு. இன்னும் இது உன் கையில் இருப்பதால் கோட்டையின் வரலாறு கட்டுக்கதையல்ல. புராணமும் பொய்யல்ல, அதுவும் ஒரு காலத்தின் சரித்திரந்தான் என்பது புலனாகிறதல்லவா?'' — இங்கு சிறிது நிறுத்தினான் அனந்த்.

கடல் ராணி கேட்டாள், ''இந்தக் கோட்டைகளின் சரித்திரம் பூராவும் உங்களுக்குத் தெரியும் போலிருக்கிறது?'' என்று.

''தெரியும். நான் ஒரு சரித்திர மாணவன்'' என்று மிக மெதுவாகப் பதில் சொன்ன அனந்த், ''ஆம் ராணி! இந்தக் கோட்டைகளைப் பற்றிப் பல விஷயங்கள் எனக்குத் தெரியும். சிந்து துர்க்கத்தைக் கட்டும்போது சிவாஜி மகாராஜா தொழிலாளிகளோடு தானும் ஒரு தொழிலாளியாகக் கோட்டைச் சுவர்களுக்குக் கல்லெடுத்தும், சேறு குழைத்தும் வேலை செய்தார் என்பது தெரியும். இந்தக் கோட்டை மதில்கள் முப்பது அடி உயரமென்பதும் பன்னிரண்டு அடி அகலமென்பதும் தெரியும். இதன் வாயில் எதிரி மரக்கலங்களுக்குத் தெரியக் கூடாது என்பதற்காக ஜன்ஜீராவைப் போல் வடமேற்கில் வைக்காமல் வட கிழக்கில் ஸஹ்யாத்ரி மலையை நோக்கும்படி அமைத்திருக்கிறாரென்பதும் தெரியும்'' என்று விளக்கினான்.

அதுவரையில் படகில் அவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்த வண்ணம் கேள்விகளை எழுப்பிக் கொண்டிருந்த கடல் ராணி தலையைத் திருப்பி அவனைப் பார்த்தாள். ஆனால் அவன் அவளைப் பார்க்கவில்லை.

---

* From the History of Siva Chatrapati by Surendranath Sen M. A.

---

நமக்குத்
தெரிந்திருப்பது அறிவு
எங்கே போனால்
தெரிந்து கொள்ளலாம்
என்று தெரிந்திருப்பது
புத்திசாலித்தனம்

— சாமுவேல் ஜான்சன்

— கே. ராஜாமணி



அவன் தலையும் பின்புறம் திரும்பிச் சிந்து நூர்க்கத்தின் வாயிலேயே அவன் கண்கள் கவனித்துக் கொண்டிருந்தன. கைகள் மட்டும் யந்திரங்களைப் போல் துடுப்புக்களைத் துழாவிப் படகைப் பாண்டவர் கோட்டைக்குச் செலுத்திக்கொண்டிருந்தன. ''அங்கு என்ன பார்க்கிறீர்கள்?'' என்று ராணி கேட்டாள். அவள் குரலில் என்ன காரணத்தினாலோ எரிச்சலிருந்தது.

அந்த எரிச்சல் குரல்தான் அந்த வாலிபனின் தலையைத் திருப்பியிருக்கவேண்டும். அவன் கண்களில் அப்பொழுதும் கனவே விரிந்து கிடந்தது. ''மாருதி கோவிலைப் பார்க்கிறேன்'' என்று அவன் சொன்னதும் மேலும் பிரமிப்பை அடைந்த ராணி ''இங்கிருந்து அது தெரியுமா?'' என்று வினவினாள்.

''மனக் கண்ணில் தெரிகிறது'' என்றான் அனந்த்.

''வேறென்ன தெரிகிறது?''

''பவானி கோவில், மஹாதேவ் மந்திரம், மகாபுருஷர் கோயில்கள் தெரிகின்றன.. அவை மட்டுமல்ல, மாலூமி வேஷம் போட்ட சிவாஜி மகாராஜாவும் தெரிகிறார்.''

இதைச் சொன்ன அவன் கண்களில் மகிழ்ச்சி சாயை படர்ந்தது. அதை ராணியும் கவனித்தாள். ''இத்தனையும் கண்டீர்களா?'' என்றாள் மெதுவாக.

''ஆம்'' என்றான் அவன்.

''என்னைக் காணவில்லை?'' என்று அவள் கேட்டு நகைத்தாள்.

அவன் சற்று ஏறெடுத்து அவளை நோக்கினான். ''என் கண்களிலிருந்து எதுவும், யாரும் தப்புவதில்லை'', என்று கூறினான். அதைச் சொன்னபோது அவன் கண்களில் மறுபடியும் அந்தப் பழைய தூக்கம் படர்ந்தது.

''அப்படியா?'' என்று வினவினாள் அவள்.

''ஆம் ராணி! உதாரணமாகப் பின்னால் வரும் நான்கு படகுகளைக் கூட நான் காணத் தவறவில்லை'' என்று கூறித் துடுப்புக்களைத் துழாவுவதை நிறுத்தினான்.

''ஏன் நிறுத்திவிட்டீர்கள்?'' என்று அவள் வினவினாள்.

''அந்தப் படகுகள் அருகில் வரட்டும்'' என்றான் அனந்த்.

படகுகள் வெகு வேகமாக வந்தன ராணியின் படகை நோக்கி. படகு நின்றதைக் கண்டதும் வந்தவர்கள் உற்சாகம் மித மிஞ்சிப் பெருகியிருக்க வேண்டும். ஒன்றாக வந்த படகுகள் நாலு திக்கிலும் பிரிந்து ராணியின் படகைச் சூழ்ந்து கொண்டன. அதிலிருந்த வெள்ளையர் துப்பாக்கிகளின் வாய்கள் அனைத்தும் ராணியையும் அனந்தையும் நோக்கிப் பயங்கரமாக விழித்தன. ராணியின் படகில் உட்கார்ந்திருந்த இரு வெள்ளையர் கூட சற்று நிமிர்ந்து உட்கார்ந்தார்கள், தங்களுக்கு விடிமோட்சம் ஏற்பட்டு விட்டது என்ற காரணத்தால். எந்த நிலையிலும் நிதானமிழக்காத ராணியின் கண்கள் கூடச் சிற்றத்தைக் கக்கின, அந்தத் துப்பாக்கிகளைச் சுட்டுவிடுவன போல.

ஆனால் அனந்த் இருந்த நிலையை விட்டுச் சிறிதும் அசையவில்லை. ராணிக்கு அப்பாவிருந்த இரு வெள்ளையரையும் நோக்கி, ''காப்டன்! லெப்டினண்ட்! அந்தப் படகுகளை விலகி நிற்கச் சொல்லுங்கள்'' என்று கூறினான்.

''தே ஆர் நாட் ஸ்டுபிட்'' என்றான் காப்டன் ஸ்டாண்டன்.

''எஸ், தே ஆர்'' என்ற அனந்த், ''இஃப் தே டோண்ட் லீவ் இம்மீடியட்லி ஐ வில் மேக் மின்ஸ் மீட் ஆஃப் யூ போத் (அவர்கள் உடனடியாகப் போகாவிட்டால் உங்கள் இருவரையும் சுட்டுப் பொசுக்கி மாமிசப் பிண்டமாக உருட்டி விடுவேன்)'' என்றான் சர்வ சாதாரணமாக.

காப்டனும் லெப்டினண்டும் பேசவில்லை. எதிரி படகிலிருந்த ஒருவன் பேசினான். ''எங்களுக்கு வேண்டியவன் இந்திரஜித் அனந்த் ஒருவன்தான். அவனை அனுப்பி விட்டால் நாங்கள் போய்விடுகிறோம்'' என்று கூறி அவன் தனது கையிலிருந்த துப்பாக்கியை அனந்துக்குக் குறி வைத்தான்.

''அப்படியானால் நாங்கள் வேண்டாமா?'' என்றான் காப்டன் ஸ்டாண்டன், தன்னையும் லெப்டினண்ட் ஸ்மித்தையும் சுட்டிக் காட்டி.

''வேண்டாம்'' குறி வைத்தவன் திட்டமாகக் கூறினான்.

''ஏன்?'' ஸ்மித்தின் கேள்வி உக்கிரத்துடன் எழுந்தது.

''யூ ஆர் போத் இடியட்ஸ்'' என்ற அந்த வெள்ளையன் ''இவன் எங்களை ஒழிக்க வந்த யமன். அதற்கு முன்பு அவனை நாங்கள் ஒழித்துவிடத் தீர்மானிக்கிறோம்'' என்றான்.

இதைக் கேட்ட கடல் ராணி வெருண்டாள். அனந்த் சிறிதும் வெருளவில்லை. ''ஸௌண்ட்ஸ் ரீஸனபிள் (அவன் சொல்வது நியாயமாகத்தான் படுகிறது)'' என்று கூறிக் கொண்டு மெதுவாக எழுந்து நின்றான் படகின் நட்ட நடுவில். அதுவரை சிந்து தூர்க்கத்தைப் பற்றி அவன் கண்ட கனவு திசை மாறி விபரீதத்தில் வந்து முடிந்து விட்டதைக் கண்ட ராணியும் அவனுடன் எழுந்து நின்றாள். ஆனால் அனந்தின் இதழ்களில் ஒரு பயங்கரப் புன்னகை விரியலாயிற்று.

(தொடரும்)



பிரயாணி: எப்பவும் மீட்டருக்கு மேலே அதிகமா கேட்கறீங்களே: அப்புறம் எதுக்கு மீட்டர் இருக்கு?

டாக்ஸி டிரைவர்: மீட்டர்னு ஒன்னு இருந்தால் தானுங்களே அதுக்கு மேலே கேட்க முடியும்? -எம். .ஏ அப்துல் காதர்

# கோல் மால்

கி. ராஜேந்திரன்



* ரிஷிகேஷ் முகர்ஜி டைரக்ட் செய்த நகைச்சுவை சித்திரமாயிற்றே என்று ஆவலுடன் போனேன். என் எதிர்பார்ப்பு பெருமளவு பூர்த்தியாயிற்று. ஆனால் கடைசி கட்டங்களில்தான் சராசரி ஹிந்தி படமாக்கி விட்டார். என்றாலும் இந்த நகைச்சுவைக் கதைக்கு ஒரு ஐடியா கொடுத்த அளவில் கோல்மால் திரைப்படத்துக்குக் கடமைப்பட்டுள்ளேன். நன்றி கூறும் முகமாக அந்தத் திரைப் படத்தின் கதாநாயகன், நாயகியின் புகைப் படத்தையே இங்கு பிரசுரிக்கிறேன். கி. ரா.

**பி**ந்தியா கோஸ்வாமியும் அமோல் பலேகரும் ஸ்லோ மோஷனில் ஒருவரை நோக்கி ஒருவர் ஓடிவருவது போல் தான் அனிதாவை நோக்கியும் அனிதா தன்னை நோக்கியும் வண்ண மலர்ச் செடிகளினூடே ஓடிவருவது போல டெக்னி கலர் கனவு கண்டான் சேஷன். அப்படியே அவளை அள்ளிக்கொள்ள அவள் அவன் கழுத்தைத் தன் மழ மழ கரங்களால் சுற்றி வளைக்க, ஒரு சுற்றுச் சுற்றி வந்து இருவர் முகங்களும் நெருங்கி இழையும் கட்டத்தில், ஆக்ஷன் ஃப்ரீஸ் ஆக வேண்டிய சமயத்தில் தடால் என்று அவள் பளுவைத் தாங்க முடியாமல் விழுந்தான் சேஷன். கனவு கலைந்தது. எழுந்து பின்புறத்தைத் தேய்த்து விட்டுக் கொண்டு தரையில் கிடந்த தலையணை, போர்வை ஆகியவற்றைக் கட்டில் மீது எடுத்துப் போட்டான். அப்புறம் தூக்கம் ஏது? எப்படி அனிதாவை அடைவது என்று திட்டம் தீட்டுவதிலேயே இரவெல்லாம் சென்றது.

இந்த மாதிரி கனவு கண்டு திட்டமெல்லாம் பிரமாதமாகத் தீட்டுவானே தவிர, அதை நிறைவேற்றி வைக்க அவனுக்குத் தைரியமே வராது. அனிதாவுடன் பேசுவதற்குக் கூட அவனுக்குக் கூச்சம். அவள் கல்லூரியை விட்டு வெளியே வந்து காரில் ஏறுவதை ரகசியமாய்ப் பார்ப்பான். அவள் எப்போதாவது இவன் இருக்கும் பக்கம் திரும்பிப் புன்னகை புரிந்தால் போச்சு, வெட்கத்தில் முகம் சிவக்கத் தலை குனிவான்.

> வாழ்க்கையின் அடிப்படையில் எழுகின்ற இலக்கியம், வாழ்க்கையை அப்படியே காட்டுமானால் சுவை பெறுவதில்லை. ஆசிரியர் வலியுறுத்த விரும்பும் கருத்துக்கேற்ப அது தொடர்பான நிகழ்ச்சியை மட்டுமே ஓராசிரியன் சிறுகதையில் காட்டுவான். தொடர்பற்ற வேறு நிகழ்ச்சிகளைக் கூறாமல் விட்டுவிடுவான். அப்படி விடுவதுதான் சிறப்பு. — சி. சு. செல்லப்பா
>
> ''தமிழ் சிறுகதை பிறக்கிறது''

அனிதாவுக்கு இது தமாஷாக இருந்தது. அவனைச் சீண்டிவிட்டு வேடிக்கை பார்க்கக் காத்திருந்தாள். ஒரு நாள் அவள் கார் வரத் தாமதமாகவே பீச்சாலையில் ஓரமாக நின்று கொண்டிருந்தாள். சேஷன் குறித்த நேரத்துக்குத் தன் ஸ்கூட்டரில் வந்து அவள் கார் வரவில்லையே என்று அவளுக்காகத் தவித்துக் கொண்டிருந்தான். அவளோ இவனைப் பார்த்துவிட்டு, விடுவிடென்று வந்து, ''மிஸ்டர் சேஷன்! நேரமாகி விட்டது. சாயந்திரம் சினிமாவுக்கு டிக்கெட் புக் பண்ணிட்டேன். கொஞ்சம் லிஃப்ட் தர முடியுமா?'' என்றாள்.

அவனோ, ''இன்னும் பத்து நிமிஷம் பார்க்கலாமே? கார் வந்துவிடுமே?'' என்றான். உடம்பெல்லாம் குப்பென்று வியர்த்து விட்டது.

''ஏன் ஸார்! இப்படி நான் உங்களை லிஃப்ட் கேட்டு நீங்கள் மறுத்தால், உங்க மீது எனக்கு எப்படிக் காதல் உருவாகும்?'' என்று இமைகளைப் பட்டாம்பூச்சிச் சிறகுகளாகப் படபடத்தாள் அனிதா.

தண்ணீர்ப்பாம்பு மாதிரி நெளிந்த சேஷன், ''அப்ப... நீங்க.... என்னை....'' என்று இழுத்தான்.

''நான் உங்களை இல்லே; நீங்கதான் என் காதலைப் பெற சென்ற ஒரு வருஷமாவே முயற்சி செய்யறீங்கன்னு எனக்குப் புரிஞ்சு இருக்கு. ஆனா உங்களுக்கு என்னை அணுகவோ, இது பற்றிப் பேசவோ தயக்கம், பயம் இல்லையா?''

கைகாட்டி மரம் மாதிரி சேஷன் தலை சாய்த்தது.

''சேஷன்! போன வருஷத்தோடு படிச்ச பாஸ் பண்ணிப் பட்டம் வாங்கிட்டீங்க.. எனக்குப் படிப்பு முடிக்க இன்னும் இரண்டு வருஷங்கள் இருக்கிறதாலே, தினம் காலேயும் மாலேயும் இப்படி காலேஜ் வாசல்லே வந்து நின்னு தவம் இருந்து என்ன பிரயோஜனம்? இங்கே வீணடிக்கிற நேரத்தை வேலே தேடிக் கப் பயன்படுத்தலாம்.''

''தேடித்தான் பார்க்கிறேன். பலன் இல்லேயே?'' என்று தேம்பினன் சேஷன். ''அதுக் காகவும்தான் இங்கே வந்து தவமிருக்கேன். அனிதா! ப்ளீஸ், உன் அப்பா கம்பெனிலே டெபுடி மானேஜர் பதவிக்கு விளம்பரம் செய்திருந்தாங்க. நானும் அப்ளிகேஷன் போட்டிருக்கேன். கொஞ்சம் தயவுபண்ணி ஒரு வார்த்தை என்னேப் பற்றி உன் அப்பா காதில் போட்டு வையேன்!''

''சபாஷ்!'' என்று சிரித்தாள் அனிதா. ''என் அப்பா உங்களுக்கு வேலேயும் கொடுத்து மாப்பிள்ளேயாக்கிக்கவும் செய்ய ணும்னு எதிர்பார்க்கிறீங்களா?'' என்று கேலியாகக் கேட்கும்போதே அவளே உள்ளூற ஒரு பயம் கவ்விற்று.

அவள் அப்பா அடக்க ஒடுக்கமான இளே ஞர்களிடம் பிரியம் காட்டுவார். சேஷன் அவருக்குப் பிடித்தமான டைப்தான். வேலே தந்து நாளடைவில் இவர் எதிர் பார்ப்பது போல் மகளேயும் மணம் முடித்துத் தர முன்வந்தால் ஆச்சரியப்படுவதற்கே இல்லே! இவன் அதிர்ஷ்டம் அப்படி அமைந்து விட்டால்....?'

''எனக்கு அந்த மாதிரி அதிர்ஷ்டம் எல் லாம் கிடையாது என்று தெரியும்'' என்று அனிதாவின் கேள்விக்குச் சோகமாகப் பதில் சொன்னுன் சேஷன்.

ஆனுல் அனிதா அப்படி எண்ணவில்லே. இவருக்கு இண்டர்வியூ கார்டு வந்துவிட்டால் தன் தகப்பனரின் மனத்தைக் கவர்ந்து விடுவார் என்று நம்பினள். அப்புறம் அடுத்த கட்டம் தன்னேக் கரம் பிடிக்க முயலுவது தானே? அதைத் தவிர்க்க விரும்பினள். அவளுக்கு ரிஸர்வ்ட், ஷை டைப் என்றுலே பிடிக்காது. வாழ்நாளெல்லாம் ஓர் அச மந்தனேக் கட்டிக் கொண்டு அழுவதாவது?

''இத பாருங்க, நீங்க மேற்கொண் டிருப்பது வீண் முயற்சி'' என்றுள் அனிதா. ''என் அப்பாவுக்கு அடக்க வொடுக்கமான பேர்வழிகளேக் கண் டாலே அலர்ஜி. தைரியமாப் பேச ணும், உலகையே விலேக்கு வாங் கிடறவன் மாதிரி நடந்துக்கணும், அவரிடமே உள்ள குறைகளேக் கூட இடிச்சுக் காட்டணும், பயப் படக் கூடாது என்றெல்லாம் எதிர் பார்ப்பார். உங்களால் அப்படி நடந்துக்க முடியாது. வேறே எங்கே யாவது டிரை பண்ணுங்க!''

''தாங்க்ஸ் அனிதா! சொல்லிக் கொடுத்திட்டே இல்லே. அப்படியே நடிச்சுடறேன்! கோல்மால் படத்திலே அமோல் பலேகர் டபுள் ரோல் ஆக்ட் பண்ணுற மாதிரி நானும் சமாளிக்கிறேன். இண்டர்வியூவின்போது அல்டாப்பாப் பேசி நடந்துக்கறேன்.''

''அட கடவுளே! நீங்க பெரிய தவறு செய்யப் போறீங்க! கோல்மால் படக் கதையே வேறே. அதிலே அல்டாப் பேர்வழி அடக்க வொடுக்கமாய் நடிக்கறதா வரது. அது நடக்கக் கூடிய காரியம். ஆனுல் நீங்க இயல்பாகவே சாது. உங்களால் அட்டகாச மாய் நடிக்க முடியாது. ஆபத்தை விலேக்கு வாங்கிக்கப் போறீங்க!''

''அதெல்லாம் நான் நிறைய ஒத்திகை பார்த்துக்கிறேன். முடிந்தால் உன் அப்பா விடம் நீயும் ஒரு வார்த்தை எனக்காகச் சொல்லி வை'' என்றுன். இந்தச் சமயம் அவளுக்குக் கார் வந்துவிட சேஷன் ஸ்கூட் டரைக் கிளப்பிக் கொண்டு விரைந்தான்.

காரில் வீடு திரும்பும்போது அனிதா தனக் குள் சிரித்துக் கொண்டாள். 'சரியான மக்கு! அப்பாவைப் பற்றி நான் சொன்னதை அப் படியே நம்பிடுத்து! இண்டர்வியூவில் அவ ரிடம் தாட்பூட் என்று பேசப் போறது. நன்ருக வாங்கிக் கட்டிக் கொண்டு திரும்பப் போகிறது!'

*   *   *

"ஹாய்! மிஸ்டர் சபாநாயகம்! ஹௌ டூ யூ டு!'' என்றுன் சேஷன்.

சபாநாயகம் திடுக்கிட்டு நிமிர்ந்தார். எத்தனேயோ அல்டாப் பேர்வழிகளே அவர் சந்தித்திருக்கிருர் என்ருலும் வேலே தேடி



வந்த ஒருவன் இப்படிக் கால் மேல் கால் போட்டுக் கொண்டு பின்னுக்குச் சாய்ந்து சிகரெட் பற்ற வைத்துக் கொள்வான் என்று அவர் எதிர்பார்க்கவே யில்லை! பிரமித்துப் போன அவர், ஏதும் கூற நாவசைப்பதற்குள் அவன் 'சினிமா வில்லன் பாணியில் சிகரெட் சாம்பலை அவர் மேஜை மீதே கரம் நீட்டித் தட்டிவிட்டுத் தொடர்ந்தான்: ''உங்க டாட்டர் அனிதா என்னைப் பற்றி உங்களிடம் சொல்லியிருப்பான்னு நினைக்கிறேன். நான் அவ காலேஜ் மேட். போன வருஷம் கிராஜுவேட் ஆனேன். அவ எனக்கு இரண்டு வருஷம் ஜூனியர். சார்மிங் கேர்ல்! எனக்கு உங்க கம்பெனியை ரொம்பப் பிடிச்சிருக்கு. உங்க நன்மையை உத்தேசித்து இங்கே வேலை செய்து உங்களுக்கு உதவலாம்னு நினைக்கிறேன். உங்களுக்கு என்ன ஆட்சேபனை இருக்கப் போறது இதிலே? ஒன்னும் இராது. எனக்குத் தெரியும். சம்பளம்.... தட்ஸ் நாட் இம்பார்டண்ட்.... இங்க, ஆறுன்னெல்லாம் தர வேண்டாம். மாசம் இரண்டாயிரம் தந்தாப் போதும்... ஓகே? யோசிச்சுப் பாருங்க. இன்னும் இரண்டு நாளுக்குள் எனக்கு அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் அனுப்பி வையுங்க. வரட்டுமா?''

வாய்ப்பாடு ஒப்பிக்கிற மாதிரி உருப் போட்டதைப் படபடவென்று கொட்டித் தீர்த்துவிட்டு ஒத்திகை பார்த்தது போல் நடித்தும் விட்டு வெளியேறிய சேஷன், வீதிக்கு வந்ததும் வெலவெலத்துப் போய் நின்றான். உடம்பில் உதறல் அடங்கப் பத்து நிமிஷம் ஆயிற்று.

உள்ளே ஏஸி அறையிலும் சபாநாயகத்துக்கு வியர்த்துக் கொட்டியது. 'எம காதகனாய் இருக்கிறானே! அவன் நடந்து கொண்டதையும் பேசியதையும் பார்த்தால் ஏதோ பிளாக் மெயில் செய்வது போலல்லவா இருந்தது! அனிதாவைப் பற்றி ஏதோ கூறினானே! ஒரு வேளை அவளுக்கும் இவனுக்கும் இடையில் ஏதாவது நடக்கக் கூடாதது நடந்து அந்தத் தைரியத்தில் இவன் என்னை மிரட்டுகிறானோ? அல்லது அனிதா வேறு ஏதாவது சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறாளோ? அது இவனுக்குத் தெரியவரத் தன் மௌனத்துக்குக் கூலியாக உத்தியோகம் கேட்கிறானா? இல்லாத போனால் இத்தனை துணிவுடன் பேசுவானா? எதற்கும் அவனை நம் கண்காணிப்பிலேயே வைத்துக் கொள்வது நல்லதில்லையா?''

சபாநாயகம் ஸ்டெனோவை அழைத்தார். அபாய்ன்ட்மெண்ட் ஆர்டர் உடனே டைப் செய்து அனுப்பிய பிறகு தான் அவருக்குக் கொஞ்சம் படபடப்பு அடங்கியது.

* *

''அப்பா! ஆபீஸில் இன்றைக்கு இண்டர்வியூ என்றீர்களே!'' என்று இரவு மெல்லப் பேச்சைத் துவங்கினாள் அனிதா.

''ஆமாம், முடிஞ்சு போச்சு; சேஷனுக்கு அபாயின்ட்மெண்ட் ஆர்டர் போஸ்ட் பண்ணியாச்சு, நீ கவலைப்படாதே!''

அவள் திடுக்கிட்டாள். 'சேஷனுக்கா? என்ன நடந்தது இண்டர்வியூவின்போது? சேஷன் அல்டாப்பாகப் பேசினாரா அல்லது தமது இயல்பான அடக்கம் மேலிடப் பேசி இவர் மனத்தைக் கவர்ந்து விட்டாரா?'

''கவலைப்பட வேண்டிய விஷயத்துக்குக் கவலைப்பட்டுத்தானே ஆக வேண்டும்?'' என்று அவள், தகப்பனார் கூறியதற்குப் பதிலாகச் சொன்னாள்.

''எதற்குமே கவலைப்பட வேண்டாம் அனிதா. நீ என் ஒரே மகள். உன்னை விட்டால் எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? தைரியமாக இரு. எப்ப வேணும்னாலும் என்னிடம் மனம் விட்டுப் பேசு!''

அவளுக்குப் புதிராக இருந்தது. 'தைரியமாக இருப்பதாவது? நான் எதற்காகப் பயப்பட வேண்டும்? எதை மனம் விட்டுப் பேசுமாறு கூறுகிறார்?'

''அப்பா ஏதோ குளறுபடி நடந்திருக்குன்னு நினைக்கிறேன்'' என்றாள்.

இதைக் கேட்டு சபாநாயகம் மேலும் மனம் பதறினார். இருந்தாலும் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல், ''குளறுபடியானாலும் எல்லாம் நாளாவட்டத்தில் சரியாகி விடும், அனிதா! குடிமுழுகிப் போய்விடாது. எல்லாம் நான் கவனிக்கிறேன்'' என்று ஆறுதல் கூறினார். சேஷன் பிளாக் மெயில் செய்வது போல் பேசியதையும் இவள் குளறுபடி, கவலை என்றெல்லாம் கூறியதையும் முடிச்சுப் போட்டுப் பார்த்த அவர், மகள் குளம், விஷம், கிணறு என்று தேடிப் போகாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையில் தேற்றினார்.

இண்டர்வியூவின்போது என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளாமல் மேலே இவரிடம் பேசுவதில் அர்த்தமில்லை என்று தோன்ற அனிதா படுக்கச் சென்றுவிட்டாள்.

இரண்டு நாட்கள் கழித்து சேஷனைச் சந்தித்து அவன் நன்றியறிதலைப் பெற்றுக் கொண்ட பிறகும் அனிதாவுக்குப் புரியவில்லை. 'இவர் அட்டகாசமாகவல்லவா நடந்து கொண்டிருக்கிறார்! அடித்து விரட்டாமல் அப்பா எப்படி இவருக்கு அடிமையானார்?' என்று எண்ணினாள். தன் கணக்கு பிசகிவிட்டதே என்று கவலையும் அடைந்தாள்.




ஆர்ப்பாட்டங்களை அடக்குவதற்கான புதிய ஆயுதமாக வாழைப் பழத்தோல் விளங்குகிறது என்று பிரெஞ்சுப் போலீஸ் துறையினர் கண்டு பிடித்து உள்ளனர்! வாழைப் பழத்தோலைப் பொடியாக்கி, தண்ணீரில் கரைத்து நடை பாதைகளில் தெளித்தால், ஆர்ப்பாட்டக்காரர்கள் வழுக்கி விழுகின்றனர். இந்தப் புதிய ஆயுதத்தின் காரணமாக, மேலைநாடுகளில் ஒரு புதிய தொழில் முளைத்து விட்டது: வாழைப் பழத்தோலில் இருந்து மாவு தயாரிக்கும் ஆலைகள் தோன்றி விட்டன!

— நியூடைம்ஸ்

ஆனால் நாளடைவில் படிப்படியாக இந்தக் கவலையும் குறைந்து விட்டது. காரணம் அவன் கவனம் புதியதொரு திசையில் திருப்பப்பட்டு விட்டதுதான்.

* * *

அடக்க ஒடுக்கமாக இராமல் ஃப்ரீயாகப் பேசிப் பழகும் பிரபாகரிடம் அனிதா மிகவும் ஈர்க்கப்பட்டு விட்டாள். ஒரு நாள் கல்லூரியில் நாடகம் இருப்பதாகவும் அது முடிந்து கல்லூரி பஸ்ஸிலேயே வீடு திரும்பிவிடுவதாகவும் கூறி டிரைவரையும் காரையும் திருப்பி அனுப்பிவிட்டுப் பிரபாகருடன் அவன் ஸ்கூட்டரில் ஏறிக் கொண்டு சினிமாவுக்குப் போனாள். இருள் சூழ்ந்த பிறகுதான் பிரபாகருடன் புறப்பட்டு வந்தது பெரும் பிசகு என்று அவளுக்குப் புரிந்தது. நட்பு, காதல் என்பதை யெல்லாம் அவன் காமத்துக்கு மறு பெயர்களாகக் கருதுவது அவளுக்குப் புரிய வந்தது. தியேட்டரில் எந்த விதமான சலசலப்பும் ஏற்படாமல் அதே நேரத்தில் தன்னையும் காத்துக் கொண்டு பிரபாகரிடமிருந்து தப்பி வரப் பட்ட பாடு பெரும் பாடாகி விட்டது.

''நாடகம் நன்றாயிருந்ததா அம்மா?'' என்று சபாநாயகம் வீடு திரும்பிய மகளைக் கேட்டார்.

''ரொம்ப நன்றாய் இருந்தது அப்பா. உத்தமன் ஒருவனை அவனுடைய வெளிப்படையான சுபாவத்தைப் பார்த்து வெறுக்கிறாள் ஒருத்தி. அவனை ஒதுக்கிவிட்டு உதவாக்கரை ஒருவனை நேசிக்கிறாள். நல்ல வேளையாகத் தக்க சமயத்தில் புத்தி தெளிந்து திருந்துகிறாள். இதுதான் அப்பா நாங்க போட்ட நாடகத்தின் கதை! நன்றாயிருக்கிறதா?''

''அடேடே! பேஷான கதைதான்'' என்றார் சபாநாயகம். ''என்னுடைய நிலைமையையே படம் பிடிச்சுக் காட்டற மாதிரி இருக்கே!''

''உங்க நிலைமையையா? என்னப்பா சொல்றீங்க?''

''ஆமாம் அனிதா. நான்கூடத்தான் அட்டகாசமாய்ப் பேசுகிறவர்களை யெல்லாம் வெறுத்துக் கொண்டு வந்தேன். இப்போது தான் தெரியறது. வெளிப்படையான சுபாவத்தை வெச்சு மனுஷனை எடை போடறது தப்புன்னு. உதாரணத்துக்கு சேஷனையே எடுத்துக்கோ! என்னையே அதிகாரம் பண்ணறாப்போல் நடந்துக்கறான். இடித்துக் காட்டுகிறான். முதல்லே இது எனக்குப் பிடிக்காமத்தான் இருந்தது. ஆனா இப்பத்தான் தெரிகிறது, அந்த மாதிரி ஒரு பேர்வழி உடன் இருப்பது எவ்வளவு பக்க பலம்னு. மற்றவங்க எல்லாம் வாய் மூடி மௌனிகளாய் இருக்கும்போது சேஷன் என் தவறுகளைத் திருத்தறான். வேலையில் சேர்ந்து ஆறு மாதத்தில் கம்பெனிக்கு அறுபதாயிரம் மிச்சப்படுத்தியும் சம்பாதித்தும் தந்திருக்கிறான் என்றால் பார்த்துக் கொள்ளேன்!''



சூரத்தைச் சேர்ந்த ஒரு வாலிபர் பெண்களின் பின்னலை வெட்டியதற்காக சமீபத்தில் கைது ஆனார்!

இந்த வாலிபர் 120 பெண்களின் பின்னலை வெட்டி கடவுளுக்கு காணிக்கையாக செலுத்தினால், இவரது தாய் இறந்து விடுவாள் என்றும் அதன் பின் இவர் சந்தோஷமாக இருப்பார் என்றும் ஜோசியம் கூறினாராம் யாரோ ஒருவர்! இதை நிறைவேற்றுவதற்காக இவர் அன்றிலிருந்து, பெண்களின் ஜடையை வெட்ட ஆரம்பித்தார். இப்படி, ஒரு பஸ்ஸில் பயணம் செய்த ஒரு பெண்ணின் பின்னலை (22-வது) வெட்டும் போது இவர் கையும் களவுமாக பிடிபட்டார்!

—சம்பத்குமாரி
ஆதாரம்: சண்டே

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''நிஜமாகவா அப்பா! அவர் உங்களை அதட்டி உருட்டி மிரட்டுவதைப் பார்க்க எனக்கு ரொம்ப ஆசையா இருக்குப்பா!''

''அதுக்கென்ன வாழ்நாள் முழுதும் நீ பார்த்துச் சந்தோஷப்பட வழி பண்ணறேன். கல்யாணத்துக்குச் சரின்னு ஒரு வார்த்தை சொல்லு'' என்றார் சபாநாயகம்.

அவள் முகம், கல்லூரியில் இடி விழுந்த செய்தி கேட்ட படிப்பு வராத மாணவியுடையது போல் மலர்ந்தது.

* * *

அமோல் பலேகர், பிந்தியா கோஸ்வாமி தோன்றும் கோல்மால் திரைப் படக் காட்சி போலவே ஸ்லோ மோஷனில் அனிதாவும் சேஷனும் ஒருவரை நோக்கி ஒருவர் ஓடி வந்தனர். சேஷனின் கனவில் அல்ல! நிஜமாகவே! அதுவும் திருமணமாகி முதலிரவன்று — கழற்றப்படாத பூமாலையுடன்! அப்படியே அனிதாவை வாரி எடுத்து அணைத்து ஒருமுறை சுழன்று அவள் வதனத்துடன் தன் முகத்தை இணையச் செய்யக் குனிந்தபோது தொபுகடீர் என்று விழுந்தான் சேஷன். நல்லவேளை, தரையில் அல்ல; ஃபோம் மெத்தை மீதுதான். அவன் மீது அனிதாவும் விழ.... அப்புறம் அங்கு நடந்ததற்கும் நமக்கும் சம்பந்தம் இல்லை.

என்றாலும் ஒரே ஒரு விஷயத்தை விண்டுரைத்து விட வேண்டும். சேஷன் அல்டாப்பாக, ஃப்ரீயாக நடந்துகொள்வதைப் பார்க்க வேண்டும் என்று அனிதா ஆசைப்பட்டது நிறைவேறவில்லை. ''நான் என்ன செய்வேன்? ஆபீஸில் மட்டும்தான் அப்படி நடிக்க வருகிறது எனக்கு. வெளியே வந்து விட்டால் உடம்பு நடுங்குகிறது. என் இயல்புப்படி அடக்க ஒடுக்கமானவனாக மாறிவிடுகிறேன்'' என்றான் அவன் தன் மனைவியிடம். தன் நிறைவேறாத விருப்பம் பற்றி அவள் கவலைப்படவும் இல்லை. அவனுடைய அடக்க ஒடுக்கமான சுபாவம்தான் அனிதாவுக்கு இப்போது பிடித்துப் போய்விட்டதே!

- கல்கியதன் ஆண்டுமலர்
  கையில் எடுத்தேன்
  கற்கண்டு கதையனைத்தும்
  அள்ளிச் சுவைத்தேன்
  பல்லறிஞர் எழுத்துக்களைக்
  கொட்டிக் கொடுத்தீர்
  பழமையுடன் புதுமைக்கோர்
  பாலம் அமைத்தீர்
  நல்லதமிழ் வளர்ப்பதற்குப்
  பயணம் நடத்தி
  நாட்டில்தனி ஏடெனவே
  பெயரை எடுப்பீர்!
  எல்லையம்மன் திருவருளைக்
  கையை உயர்த்தி
  இந்தமிழால் வேண்டுகிறோம்
  நெஞ்சை நிமிர்த்தி!

திருச்சி-14 வி.கே. கஸ்தூரிநாதன்




# கடல்ராணியின் பயணம் சிறக்கட்டும்!

வட்ட மேஜை

- திரு சாண்டில்யன் எழுதும் கடல் ராணி தொடர்கதைக்கு இவ்வூர் புத்தக விற்பனையாளர்களான பதி புக்ஷாப் ஒரு கப்பலையே தயாரித்து விளம்பரம் செய்திருப்பதைப் புகைப்படம் எடுத்து அனுப்பியிருக்கிறேன்; கடல் ராணியின் கப்பல் பயணம் சிறப்பாக அமைய வாழ்த்துகிறேன்.

காஞ்சி-3 வி. சே. வீரராகவன்

- தலையங்கத்தில் முதல் பரிசு பெற்ற 'ஓர் உயிர் விலைபோகிறது' சிறுகதையைப் படித்தால் கண்கள் கலங்கும் என்று குறிப்பிட்டிருந்தீர்கள். ஆனால் கதையைப் படித்த பிறகு மனைவியைப் பணம் சம்பாதிக்கும் இயந்திரமாக நினைப்பவர்களை நிற்க வைத்துச் சுட வேண்டும் என்று ஆத்திரம்தான் வந்தது.

சென்னை-33 எஸ். கோபாலன்

- நடுவர் குழு நடுநிலைமையுடன் ஆராய்ந்து ஓர் அருமையான, முதல்தரமான கதைக்குத்தான் பரிசு கொடுத்திருக்கிறது. கல்கி வாசகர்கள் என்ற முறையில் எங்களுக்கும் தான் பெருமை.

சென்னை-44 எஸ். வேதா

- பவர் கட் ஜோக்ஸ் மிகவும் அற்புதமாகக் காட்சியளித்தது. வாரந்தோறும் ''பவர் கட்'' என்ற பகுதியை ஆரம்பித்தால் என்ன?

திருச்சி-2 அரச. நாராயணன்

- பவர் கட் ஜோக் (4) எனக்கு மிகவும் வேதனையை உண்டாக்கி விட்டது. ஓர் ஆசார சீலரை, வயதானவரை, தெய்வத்துக்குப் பயந்தவரை கற்பனையில் உருவாக்கிக் கிண்டல் செய்வானேன்?

சென்னை-4 வெ. முத்துகிருஷ்ணன்

- ''வைரங்கள்'' முதல் அத்தியாயத்திலேயே ஜொலிக்க ஆரம்பித்து விட்டது. சிறுகதை சிறப்பிதழ் பற்றிய அறிவிப்போ, எங்களை மகிழ்ச்சியில் விண்வெளியில் பறக்கச் செய்து விட்டது.

கல்யாண் ஆர். ஸ்ரீனிவாசன்

- இயற்கையின் அழகை இன்னும் கொஞ்சம் வர்ணிக்க மாட்டாரா என்று வாசகர்களை ஏங்க வைக்கும் ஆரம்பத்தைப் பாராட்டுவதா? கதையின் நாயக, நாயகியரை அறிமுகப்படுத்தியிருக்கும் அழகைப் பாராட்டுவதா? சாண்டில்யன் கதையில் எதைப் பாராட்டுவது, எதை விடுவது ஒன்றும் புரியவில்லை போங்கள்!

தாராபுரம் இளமதிப் பிரியன்

- ஆண்டு மலர் மணம் நிறைந்திருந்தது. மலரைத் தாங்கும் காம்பு பாகம் போன்று ஸ்ரீ செம்பியன் அவர்களின் பில்லா—ரங்கா தாங்கி நின்றது மலரை.

திண்டுக்கல்-1 சுப. பகபதி

- பிரதமரை வாழ்த்தியதுடன், காந்தி சமாதிக்கு முன்னால் சத்தியப் பிரமாணங்கள் எதுவும் எடுத்துக்கொள்ள வேண்டாம் என்று பணிவுடன் கேட்டுக் கொண்டுள்ளீர்கள். இது தங்கள் ஒருவரின் வேண்டுகோள் அல்ல. இந்தப் பாரத நாட்டில் வாழும் அறுபத்தி ஆறு கோடி மக்களின் வேண்டுகோளுமாகும்.

ஆரணி இரா. சிவசுப்பிரமணியன்

- பதினெட்டாம்படி கருப்பன் கார்ட்டூன் கண்மூடித்தனமான எதிர்ப்பு. உறவுக்குக் கைகொடுத்து அதேபோது உரிமைக்குக் குரல் கொடுத்திருக்கிறார் நமது முதல்வர்.

பெங்களூர் மு. அதியமான்

- பதினெட்டாம்படி கருப்பன் கார்ட்டூன் மூலம் சிந்திக்க, சிரிக்க வைத்திருக்கும் 'கல்கி' நியாயமான தவறுகளைச் சுட்டிக்காட்டி நடுநிலைமையாக இருப்பது கண்டு பெருமைப்படுகிறோம்.

பெங்களூர்-5 அ. குமார்

# ஓர் ஊமையும் பேசிவிட்டது!

**பி.வி.ஆர்**

அன்று முதல் நேற்று வரை நடந்ததை யெல்லாம் நினைத்துப் பார்த்தபோது எல்லாமே நீண்டதொரு கனவாகத் தோன்றியது. வறண்டு போன கண்கள் இரு கல் கட்டிகளாக நிற்க அவள் ஒன்றுமில்லாத சுவரையே அர்த்தமில்லாமல் வெறித்துப் பார்த்துச் சலித்துப் போனாள். சலிப்பிலும் பழைய சித்திரங்கள் சுவரினுள்ளிருந்து வெடித்துச் சிதறி அவள் முகத்தில் அடிப்பதாகப் பட்டது. அவள் தன் இரு கைகளையும் இரு கன்னங்களின் மீது வைத்து அழுத்தி....அழுத்தி...

''எல்லோருக்கும் சேர்த்து ஒரே நமஸ்காரமாகப் பண்ணிவிடு அபிதா.''

அவள் குனிந்த தலையுடன் லேசாகக் கொசுவை சுதம்பக் கொத்து கீழே விழுந்து விடக் கூடாதே என்ற பயத்துடன் மண்டி இட்டு எழுந்திருக்கிறாள். மூன்று ஜோடிப் பாதங்கள் மட்டுமே அவளுக்குத் தெரிந்த போதிலும் எந்த ஒரு ஜோடியுடன் அவள்

> பாடுபட்டு அறியாதவன் பாட்டாளியின் துயரத்தைப் பற்றியும் சேற்றில் இறங்கி அறியாதவன் குடியானவனுடைய கஷ்டத்தைப் பற்றியும் என்னதான் கண்ணீரில் பேனாவைத் தோய்த்துக் கொண்டு எழுதினாலும் அந்தக் கதைகளில் மற்ற எல்லாச் சிறுகதை இலட்சணங்களும் இருக்கலாம் உள்ளத்தை ஊடுருவித்தைக்கும் படியான இதயம் ஒன்றிய ஈடுபாடு இருப்பதில்லை.
>
> —பேராசிரியர் கல்கி

அக்னியை வலம் வரப் போகிறாள் என்று தெரிந்து விட்டது.

''சரி. அப்பப் போய் வரோம். எங்களுக்குப் பிடிச்சா மட்டும் போதுமா? இதோ இவனுக்கும் பிடிக்கணுமே. லேசிலே வாயைத் திறந்து பேச மாட்டான். அப்படி ஒரு குணம். காலேஜ் ஃபீஸைக் கூட தன் அம்மா மூலம்தான் என்கிட்டே யிருந்து வாங்கிப்பான்... ராத்திரியே போன் பண்றேன்.''

ஆறு அடிப் பிள்ளையின் ஐந்தே முக்கால் அடித் தகப்பனார் 'ஓட் ஆஃப் தாங்க்ஸ்' வழங்குகிறார்.

சினிமாக் கொட்டகை காலியான மாதிரி ஓர் அமைதி நிலவுகிறது. அப்பா பட்ஜெட் போட ஆரம்பிக்கிறார். அம்மா அவசரப் படவேண்டாம் என்று கை அமர்த்திவிட்டு அபிதாவிடம் சொல்லுகிறாள்.

''என்னடீ?''

''என்ன?!''

''குடும்பம் நல்ல குடும்பம். பிள்ளை இன்னிக்கு ஊர்க்காண



நடிப்பு: திரு எல். வி. பார்த்தசாரதி - திருமதி ரங்கநாயகி பார்த்தசாரதி

ஆம் நாளைக்கு நிச்சயம் ஊருக்கு இல்லே. என்ன சொல்றே?''

''அங்கிருந்து போன் வரட்டும்.''

''வந்த மாதிரிதான்.''

''வரட்டும்.''

''உனக்குப் பிடிக்கலேன்னு இப்பவே சொல்லிடு. அப்புறம் எங்க மேலே பழியைச் சுமத்தாதே.....''

''போன் வரட்டும்.''

**வி**லது காலை வைத்து உள்ளே வந்து, பன்னீர் வீசி, பாலும் பழமும் சாப்பிட்டு, கட்டிலின் ஓட்டில் உட்கார்ந்து அவனுக்குத் தன்னையே அர்ப்பணித்தாகி விட்டது. அவன் போன ஜன்மத்தில் கஞ்சமகாப் பிரபுவாக இருந்திருக்கவேண்டும். இந்த ஜன்மத்தில் விட்ட குறை தொடர்ந்து அது நாக்கில் ஒட்டிக் கொண்டிருந்தது.

''இன்னிக்குக் கல்யாணப் பரிசு கடைசி நாள்.''

அவள் நினைவு மூட்டியதுமே, அவன், ''இன்னிக்குப் பிரதோஷம்'' என்று நினை வூட்டுகிறான். பிறகு ''நான் எப்போ ஆபீஸி லிருந்து வருவேன்னு எனக்கே தெரியாது'' என்கிறான்.

அபிதா ஒரு பிரதோஷத்திலிருந்து மூன்று பிரதோஷங்களுக்குக் கட்டினவனைப் பெற்ற வனுடன் செல்கிறாள்.

ஒரு தடவை திரும்பி வந்ததும் அவள் கேட்கிறாள்.

''அபிதா உனக்கும் அவனுக்குமிடையே ஏதாவும் பூசலா?''

''எனக்குத் தெரிஞ்சு இல்லே.''

''ஏன் இப்படிச் சொல்றே?''

''கார்த்தாலே ஏழரைக்கு எழுந்து காப்பி சாப்பிட்டதும் பேப்பரில் மூழ்குகிறார். எட் டரைக்கு ஷேவிங், குளியல். எட்டு ஐம்ப துக்குச் சாப்பாடு. அதை நீங்க அவருக்கும் அப்பாவுக்கும் போடறீங்க. என்று கேட்டா, நான் பரிமாறினு அப்பாவுக்குப் பிடிக்கற தில்லே. ராத்திரி ஆபீஸ்லேந்து எப்ப வருவார்னு எனக்குத் தெரியாது. இருட்டிலே கடிகாரம்.....''

---

''முதலாளி கிட்டே எனக்காக நீ சம்பள உயர்வு கேளு. உனக்காக நான் கேட் கிறேன்.''

''ஏன் அவரவர்களுக்கு அவரவர்கள் கேட் டால்...?''

''அது சுயநலமில்லையா?''

எம். ஏ. அப்துல் காதர்



''நான் அவன்கிட்டக் கேட்கிறேன்.... எப்பவாவது ஒரு முழம் பூவாவது வாங் கின்டு வந்திருக்கானு?''

''இதை அவர்கிட்டே நீங்க தயை பண் ணிக் கேட்காதீங்க. நாளைக்கே ஒரு பெரிய மாலையா வாங்கி, ஒரு வருஷத்துக்குக் கணக்குச் சொல்லுவார்...''

''ரெண்டு மாசமாச் சம்பளப் பணத்தை என்கிட்டே தர்றான். இனிமே உன்கிட்டே தான் கொடுக்கணும்னு சொல்லிடறேன்.''

''பெரியவர்கள் இருக்கிறப்போ என் கிட்டே....''

''என் பார்வையிலே நீங்க ரெண்டு பேரும் ரெண்டு துருவத்திலே நிக்கறீங்க... பென் டாட்டி தூங்குகிற வேளையிலே புருஷன் ஒரு நாள் வீடு திரும்பலாம். ரெண்டு நாள் திரும்பலாம். மாசக்கணக்கா அப்படி இருந்தா எப்படி?''

''சீட்டாடறார்.''

''தெரியும்.''

''சூது வைச்சு.''

''தெரியும், தெரியும்.''

''அதிலே மனசு லயிச்சுட்டா அப்புறம் வேறு எதிலேயும் போகாது அம்மா.''

''நீ வந்ததும் சீட்டாட்டம் போயிடும்னு நினைச்சேன். போகலேன்னு தெரிந்து விட் டது.''

''உங்க கிட்டே சொல்லப்படாதுன்னார்.''

''என்ன?''

''நீங்களே கேளுங்கள். உங்க பெயரைச் சொல்லித்தான்....''

''என்ன சொல்றே அபிதா.''

''மூங்கில் வளையல் ஒரு ஜோடி.''

''ராஜா ராணி ஜாக்கிக்குப் போயிடுத்தா?''

''அது தெரியாது.''

''ஏன் கொடுத்தே?''

''கேட்டார்.''

''கேட்டால் கொடுத்துடறதா?''

''புருஷன் ஆச்சே. என் மேலே வெறுப்புப் பிறந்துட்டா?''

''ரெண்டு வார்த்தை பளீர்னு கேட் டிருக்கணும். சரி சரி விடு. நான் கவ னிச்சுக்கறேன்...''

அம்மாவால் சொன்னபடி நடந்துகொள்ள முடியவில்லை. அப்பா அன்று திடீரென்று அலறிக் கொண்டு சாய்ந்தார். இரவு எட்டு மணி. டாக்டர் வரும்போது மணி ஒன்பது. ராயப்பேட்டைக்கு டாக்டர் காரிலேயே போனவர் ஆஸ்பத்திரியை அடைந்தும் அடை யாமலும் போய்விட்டார்.

இங்கே ஓர் ஆட்டம் நின்று விட்டது. ஆனால் ஏதோ ஒரு ஊளப்பில் ஆட்டம் அன்று வழக்கத்துக்கு மீறித் தொடர்ந்தது.

வீட்டுக் கூடத்தைத் தாண்டி அவன் உள்ளே வந்தபோது தலைமாட்டுக் குத்து விளக்கையும் கால்மாட்டுத் தாயாரையும் தான் அவன் கண்டான். உலர்ந்து போன கண்ணீருக்கிடையே தங்கை கப்பூ அவன் மீது வசைமாரி பொழிந்தாள். மௌனமாய் அம்மா அருகே உட்கார்ந்து கொண்டான்.

அம்மா கேட்க வேண்டிய கேள்வியைக் கேட்கவில்லை. அவள் முன் மாபெரும் கேள்வி ஒன்று முளைத்து விட்டதே?

அதன் பிறகு அவன் இரண்டு மூன்று இனிப்புகளின் விலாசங்களையும் டெலிபோன் நம்பர்களையும் கொடுத்து விட்டுத்தான் தன் வெறியில் இறங்கினான். அப்பா புகட்டிய பாடம் அவன் நெஞ்சில் உறைத்திருக்கவேண்டும். தான் இருக்கும் இடத்தை உணர்த்தாமல் இருக்கக் கூடாது.

**மா**மனாரின் வருட ஆப்திகம் நடக்க இன்னும் ஒரு மாதம் இருக்கிறது. அவள் பிரசவ விடுதியிலிருந்து திரும்பிப் பத்து நாட்களாகி விட்டன. அவன் ஒரு நாள் வந்தான். இருபத்தொரு நாள் குழந்தை தரையில் பிஞ்சு சிறு வெள்ளரிப் பிஞ்சு போலக் கிடந்தது. அவர்களுடைய இரண்டாவது குழந்தை: உஷாவுக்கு தம்பி. அதை அவன் ஓர் அசிரத்தையுடன் பார்த்து விட்டு அவளிடம் பேசினான்.

''அடுத்த மாசம் திதி.''

''உம்.''

''நாலு நாள் முன்னாடியே நீ வந்துடணும்னு அம்மா சொல்றா.''

''மூணு மாசம் முழுசா முடிஞ்சப்புறம் வரலாம்னு இருக்கேன். அதுவும் அதுக்குள்ளே மாறாமல் இருந்தால்....''

''மனைவி இல்லாம எப்படித் திவசம் பண்றதாம்?''

''பின்னாலே நின்னு பில்லு பிடிச்சாத்தான் ஆச்சா? யாரையாவது விட்டு ராஜா ராணி ஜாக்கியைப் பிடிச்சுண்டு நிக்கச் சொல்லுங்க.''

''அபிதா!''

''என்ன....? குழந்தைக்கு உங்க குரல்லே உடம்பு நடுங்கறது.''

''நீயா இப்படிப் பேசறே? நீகூடவா....''

அவள் தன்னுள்ளே வெடிக்கும் வெடிப்புக்களைக் கண்ணீரால் அடக்கினாள். மாமியார் மனம் நொந்து போக அவள் காரணமாக இருப்பானேன்?

''சரி வரேன். ஒரு வாரம் முன்னாடியே வந்துவிடறேன். உங்க உடம்பையும் கொஞ்சம் கவனிச் சுண்டா நல்லது.''

அவன் பதில்சொல்லாமல் வெளியேறினான்.

ஆப்திகம் நடந்தது.

வந்த உறவுக் கூட்டம் கலைந்தது. பெண் கப்பு பிடிவாதம் செய்யவே அம்மா அவளுக்கு ஒத்தாசையா இருக்க, ரஜாய், ஸ்வெட்டர், கம்பளிப் போர்வை யெல்லாம் வாங்கிக் கொண்டு ஒரு டிசம்பர் கடைசியில் தமிழ் நாடு எக்ஸ்பிரஸில் ஏறி ஜான்ஸிக்குச் சென்றான்.

கண்ணன் பிறந்த ஆறும் மாதம் அம்மாவுக்கு உடல் நலம் இல்லை என்று கப்பு பதினைந்து பைசாவில் தகவல் அனுப்பினான்.

அதன் பிறகு ஒரு நாள் தந்தி வந்தது.

பின்னைக்குச் சிரமமில்லாமல் போய்விட்டது. கப்பு பட்ட சிரமத்துக்காக, அவள் தானே தன் தாயாரின் வைரத் தோடு, இரட்டை வடச் சங்கிலி, கை வளையல்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு பீதி

# இந்த இதழில்...




கல்கி சிறுகதைச் சிறப்பிதழைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அதில் இடம்பெற்ற ஒரு வாக்கியம் ஏதோ இனிய நினைவுகளை எழுப்ப, தலைநிமிர்ந்து நோக்கி, கண்கள் ஒளி சிந்த, முல்லை தொடுத்தாற்போல் புன்னகைப்பவர் குமாரி பவானி. ராணி மெய்யம்மை பள்ளியில் + 2 நிலையில் படிக்கும் இவர் பரத நாட்டியத்திலும் தேர்ச்சி பெற்று வருகிறார்.

வண்ணப்படம் எடுத்தவர்:

சரஸ்வதி சத்தியமூர்த்தி

✻

இவ்விதழில் சிறுகதைகளுக்காகப் புகைப் படங்கள் எடுத்தவர்: மன்னை மூர்த்தி.

✻

இந்த இதழை இவ்விதம் தயாரிக்கலாம் என யோசனை கூறி ஓவியர் கல்பனாவின் உதவியுடன் உருவாக்க உதவியவர்: பி. ரங்கநாயகி.

நகைகளையும் இன்ஷுர் தபாலில் அனுப்பி வைக்கும்படி உரிமைத் தபால் போட்டாள்.

**''ம**ம்மி!''

''என்னடா?''

''எங்க ஸ்கூல்லே நாளன்னிக்கு பேரண்ட் மீட்டிங். அப்பா வந்துதான் ஆகணும்னு மிஸ் சொல்லியிருக்கா.''

''நீயே அப்பா கிட்டே சொல்லு.''

''எப்படிச் சொல்றது? கார்த்தாலே அப்பா முழிச்சுக்கறப்போ மணி எட்டாயிடறது. அதுக்குள்ளே வாசல்லே பஸ் வந்து நிக்கறது.... ராத்திரி அவர் வர்றப்போ நான் தூங்கிடறேன்.. நீ சொல்லு.''

''சரி.''

''அம்மா, நான் அப்பாவை முழுசாப் பார்த்துப் பத்து நாளாறது...''

''பையனு லட்சணமாப் போய்ப் படி.''

கண்ணன் சென்றான்.

இவன் ஏன் பிறந்தான்? ஒரு விபத்தின் விளைவாய் இவன் பிறந்து விட்டான். இதற்கு அவன் அவளைச் சொல்லிக் குற்றமில்லை. உஷாவுக்கு இரண்டு வயது இருக்கையில்

ஒரு மந்திரியின் மரணத்தை முன்விட்டு எல்லாக் கிளப்புகளையும் மூடிவிட நேர்ந்தது. அந்த நாள்—

அபிதா கவரைப் பார்த்தாள்.

''அபி...''

''உம்.''

''இன்னிக்கு என்ன செய்யலாம். ஆபீஸ் லீவு. கிளப்பும் கிடையாது.''

''நான் உஷாவுடன் அம்மாவைப் பார்க்கப் போய்க்கொண்டிருக்கிறேன்..... நாளை சாயுங்காலம் திரும்பி வருவேன்.''

''ஒருவேளை இது திருப்பு முனையாக இருக்கலாம். நம் வீட்டில்நல்ல சமையலாச் சமை. நல்ல டிபனுச் செய். கோவில் வாசல்லே பூ இருக்கும் வாங்கி வரேன்.... சாயங்காலம் காரம் ஆடுவோம். ஒரு நாள் பூரா உன்னுடன்... உன்னுடன்....''

''மந்திரியின் மரணத்தைக் கொண்டாடுகிறீர்களா? நான் அம்மா வீட்டுக்குப் போக ரிக்ஷாக்காரனை வரச் சொல்லியிருக்கேன்.''

''அவனை அனுப்பிவிடு.''

எத்தனையோ மாதங்களுக்குப் பிறகு அவன் அவளை அணைத்துக் கொண்டான்.

அவனுள் ஓயாமல் ஒழியாமல் அலறி அடித்துக்கொண்டிருந்த அலைகள் எல்லாம் குமுறி எழுந்தன. உணர்ச்சிகள் பிழம்பாகி ஓடி வெளியேற வடிகால் தேடின.

உஷா உறங்கிக் கொண்டிருந்தாள். அவள் தன்னை இரண்டாம் முறையாக அவனுக்கு அர்ப்பணித்துக் கொண்டாள்.

ஒரு மந்திரியின் மரணம் விதியின் வாசலாக அமைய, கண்ணன் என்ற ஒரு கமை அதன் வழியே வந்தது.

இந்தத் தாம்பத்தியத்தில் அவன் கண்டகசம் என்ன?

இத்தனை காலமாக ஏன் அவள் தன் அதிருப்தியை வெளிக் காட்டவில்லை? ஏன் எதிர்க்கவில்லை? ஏன் தன் மனத்தைத் திறந்து காட்டவில்லை?

சிதறிப் போயிருந்த உணர்ச்சிகள் பல திசைகளிலிருந்து ஓடி வந்தன. ஒன்று சேர்ந்தன. ஒரு சிகப்புப் பிழம்பாய் உருவெடுத்தன. வார்த்தைகள் ஒரு கோவை அழகுடன் தயாராக இருந்தன.

அவன் வரவேண்டியதுதான் பாக்கி. இன்று இரவுதான் அவனுடைய கடைசி இரவு.

---

''என்னங்க, ஸ்கோர் எவ்வளவு?''

''சிக்ஸ்டீ பார் நோலாஸ்.''

''இவ்வளவு தானா!''

''இது சின்ன டிரான்ஸிஸ்டர் சார். இதுல இவ்வளவு தான் ஸ்கோர் வரும்!''

—பூண்டி.



தட தடச் சத்தம்.

கடிகாரத்தைப் பார்த்தாள். பதினொன்று.

அவன் வந்தான்.

நடையில் ஒரு பரபரப்பு. நிதானமின்மை.

''ஏன் இவ்வளவு சீக்கிரம் வந்துட்டீங்க?''

''அபிதா!''

''போசாதீங்க.... இந்த வீடு ஒரு சத்திரம். அதிலே நீங்க ஒரு வழிபோக்கன். உங்களுக்கு உழைச்சுக் கொட்ட நான் ஒரு சமையல்காரி... இனிமே உங்க வாழ்க்கையைக் கிளப்பிலேயே வைச்சுக்குங்க. நான் வேலைக்குப்போறதுன்னு தீர்மானிச்சுட்டேன். என் குழந்தைகளை நான் பார்த்துக்கொள்றேன்.....''

''அபிதா.... நீயா கோபிச்சுக்கறே ?''

''நீங்க பேச வேண்டாம்.''.

''பேசித்தான் ஆகணும்.''

''என் காதிலே எதுவும் விழாது.... நம்ம கதை இன்னியோட முடிஞ்சது...''

''ஆமாம் அபிதா... ஒரு நாலஞ்சு வருஷத்துக்கு நம்ம கதையிலே ஓர் இடைவெளி... நாளைக்குக் காலைவரைக்கும் இருந்துட்டுப் போயிடறேன்....''

''அதுவரையில் என்ன செய்யப் போறீங்க?...''

''தெய்வத்தைப் பிரார்த்திக்கப் போகிறேன்.... ஜெயில்லே கோவில் இருக்குமோ என்னமோ... நாளைக்கு அதிகாலை கோவிலுக்குப் போயே ஆகணும்!''

''சரி... நான் போய் முடங்கறேன்...''

''அபிதா!''

''இன்னும் என்ன?''

''நான் ஏன் ஜெயிலுக்குப் போகணும்னு நீ இன்னும் விசாரிக்கவில்லை!''

''அவசியம் இல்லை.''

''சீட்டாடிய கை....''

''பாங்க் பணத்தையும் களவாடிய தாக்கும்!''

''ஆமாம்... அன்னிக்கே நீ என் கையை ஒடித்திருக்க வேண்டும், அபிதா...''

''இந்தப் பதினைஞ்சு வருஷமா என்னைச் சிறையிலே தள்ளி, என் மனசை ஒடிச்சதுக்குத் தெய்வம் உங்க கையை ஒடிச்சுடுத்து. இப்ப எந்தக் கையாலே தெய்வத்தைக் கும்பிடுவீங்க?''

''இன்னும் அடங்கலையா உன் கோபம்!''

''அடங்கற கோபத்தையா நீங்க என்னுள்ளே மூட்டி யிருக்கீங்க... என் மனசை எரிமலையாக மாத்திவீங்க... சின்ன வயசிலே ஜோக் அடிச்ச என் நாக்கு ஊமையாயிடுத்து. பொழுது விடியறதுக்கு முன்னாடிப் போயிடுங்க.... என் குழந்தைகள் உங்களைப் பார்க்க வேண்டாம்.''

''என்னை மன்னிச்சுடு அபிதா!''

''மன்னிக்கிறேன் — அடுத்த ஜன்மத்தில்— அப்படி ஒன்று இருந்தால்....''

அபிதா கவரைப் பார்த்தாள். அதன் நிர்மலமான வெண்மையில் அவளுடைய உணர்ச்சிகள் அடங்கிப் போயின.

நான்கைந்து ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு புது வாழ்வு மலரும் என்ற நம்பிக்கை ஒரு சின்னஞ் சிறு பூவாய்ப் பூத்தது.

புஷ்பா தங்கதுரை



**நா**த்!''

''எஸ் ஸார்.

''எம். கே. சச்வர் வரான். அடிஷனல் செக்ரடரி, வி. மினிஸ்ட்ரி. இரண்டு மணிக்கு ஏர்போர்ட் போயிடு.''

''யெஸ் ஸார்.''

''ஏ கெஸ்ட் ஹவுஸ் அலாட் பண்ணு.''

''எஸ் ஸார்.''

''ரொம்ப முக்கியமானவன். நல்லாக் கவனிக்கக் ணும்.''

''எஸ் ஸார்.''

> கதைக் கலைக்கு வேண்டிய முதல் தகுதி ரசிகத் தன்மை. அதாவது கலையைப் படைப்பவன் சிறந்த ரசிகனாக இருக்கவேண்டும். வாழ்க்கையைச் சுவைக்கத் தெரியாதவனிடமிருந்து சுவையான கலைப் படைப்புக்கள் தோன்ற மாட்டா.
>
> —அகிலன்
> (கதைக்கலை)

போனை வைத்தேன். மிஸ் ரீனுவைக் கூப்பிட்டேன். ஆபீஸ் ஏணிப் படியில் எனக்கு அடுத்தவள். அடுத்த கண்ணாடி அறையில் இருப்பவள். புதிதானவள்.

ஜாருராக வந்தாள். ஆங்கிலோ இந்தியப் பரம்பரை. ஸாரி இறங்கித் தொப்புளுக்கு ரொம்ப தூரம் கீழே! என்றைக்காவது விழும் என்று காத்திருந்தேன்.

''ரீனு, ஏஸி கார் ரெடி பண்ணு. ஏ கெஸ்ட் ஹவுஸை ரெடி பண்ணச் சொல்லு. நான் ஏர்போர்ட் போறேன்.''

''எஸ், மிஸ்டர் நாத்!''

''பெருமாள் பிள்ளை வொய்ன் ஷாப்புக்குப் போன் பண்ணு ஒரு கேஸ் — எல்லாமாக.''

''எஸ் ஸார்.''

கதவை விரித்துக் கொண்டு போனாள். கையைத் தூக்கி அந்த 'Pull' கதவைத்

புகைப்படம்: மேஜர் ஜே. என். நலாரிக்கா தீட்டிய மாடர்ன் ஆர்ட் ஓவியம்.

திறக்கும்போது சில விநாடிகள் என் நெஞ்சத்துக்குள் இதயத் துடிப்பு ரேஸ் குதிரையின் குளம்பொலி போல் எழும்பியது.

எம். கே. ஈஸ்வரன் ஐம்பதில் இருப்பார். பழைய ஐ.ஸி.எஸ்.ஸாக இராது. பிரமோஷனில் மேலே ஏறியிருப்பார். அந்த நாள் விபூதித் தடம் நெற்றியில் தெரிந்தது. அழித்துப் பல வருஷங்கள் ஆகியிருக்கும். கொஞ்சமான முடி. அதை வைத்துச் சிக்கனமான ஒரு கிராப் தயார் பண்ணி யிருந்தார். ஸீல் மிருகத்தின் மீசை போல் மூக்கிலிருந்து இரண்டு கோடுகள் வாய்க்கு இறங்கி இருந்தன. ரொம்ப அப்பாவியாக இருந்தார். ஆனால் தப்பிதமான எடை போட மாட்டேன். உள்ளே கிராதகனாக இருப்பார்.

வெறும் ப்ரீஃப் கேஸ்தான் கொண்டு வந்தார். மாற்று உடை ஒரு ஸெட் இருக்கும். சகஸ்ர நாமாவளி வைத்திருப்பாரோ. இல்லை டார்ஸீப் நியூஸ் இருக்குமோ?

மனிதனைச் சீக்கிரம் துப்பறிந்தாக வேண்டும்.

ஏ ஹவுஸில் இறக்கினேன்.

அந்த ஹாலையும் பெட் ரூமையும் ஐந்து ஸ்டாரில் கூடப் பார்க்க முடியாது. ஈஸ்வரன் ரொம்பத் திருணமாகப் போனார். அங்கே இங்கே கண்ணைத் தூக்கவில்லை. எல்லாம் தெரிந்தவர் போல் சரியாக பெட்ரூம் சென்று பெட்டியை லபக்கென்று அடுத்த பெட்டில் போட்டுவிட்டு டையை நெகிழ்த்தினார்.

''மிஸ்டர்... (என் பெயர் நாத், ஸார்!) மிஸ்டர் நாத்! கபாலி கோவிலுக்குப் போய் வரணும்.''

''எஸ் ஸார்.''

''ஆறு மணிக்கு.''

''எஸ் ஸார்.''

ஒரு எஸ்.டி.டி. போட்டு டில்லியில் பெண்டாட்டியோடு சாவகாசமாகப் பேசினார். பெண்கள் நாலு பேரிடமும் பேசினார். நாய் ஸாலமோனைப் போனில் குரைக்கச் சொன்னார்.

கடைசியில் நான் தயங்கி, ''ஸார், வெஜி.. என்று சொல்லு முன், ''வெஜிதான். முட்டை மட்டும் சாப்பிடுவேன்'' என்றார்.

''ட்ரிங்க்ஸ் கொண்டு வரவா?''

விருப்பமில்லாமல் பார்த்தார்.

''குளிர்ச்சியா இப்போ போதும்.''

அடேடே, மனுஷன் நாசூக்காகச் சொல்லி விட்டான் பார் என்று நினைத்தேன். இரண்டு நாளில் ஒரு கேஸ் போதுமா, சந்தேகம்.




என் முதல் பிரச்னைகள் தீர்ந்து விட்டன. அடுத்துக் கடைசியாக அந்த இக்கட்டான பிரச்னை.

எங்கள் கம்பெனி நிறைய லாபத்தில் வாழ்வது. இவ்வளவுக்கும் சுத்தமான கெமிகல் காம்பவுண்ட்களைத் தயார் செய்வது. இவைகளுக்கு அந்நிய நாடுகளில் சுத்தமான வரவேற்பு உண்டு. இங்கே யிருந்து அவைகளைக் கிளப்பி வெளி நாடுகளுக்குப் போக வைப்பதற்கு முன்தான் நிறைய அசுத்தங்களைச் செய்ய வேண்டி வந்தது. பெரிய அரசாங்க அதிகாரிகளையும் இதரர்களையும் குஷிப்படுத்த வேண்டும். ஏ, பி, ஸி என்று கெஸ்ட் ஹவுஸ் கட்டியது இவர்களுக்காக. ஒவ்வொருத்தனும் வந்து போகிறது என்றால் பத்தாயிரம் இருபதினாயிரம் ரூபாய் செலவு.

எம். கே. ஈச்வரன் பாதாம் ஹல்வாவும் துளி காராப்பூந்தியும் சாப்பிட்டு ஹாயாக மூணு அஞ்சை ஊதினார். யோசித்து யோசித்துப் போன் பண்ணினார். சாயங்காலம் ஆசாரமாகப் பட்டு கட்டிக் கபாலிக்கு வந்தனம் சொல்லிவிட்டு வந்தார்.

ராத்திரி வந்தவுடன்தான் என் கஷ்டம் ஏறியது. இக்கட்டான பிரச்னை. கபாலிக்கு வேறு முகமன் காட்டிவிட்டு வந்திருக்கிறார். இவரிடம் போய் எப்படி ராத்திரிக்கு அந்த விஷயம் பற்றிக் கேட்பது?

பரிமாறும் அம்பியைப் பிடித்தேன். குசுகுசுத்தேன். அம்பி ரொம்ப உற்சாகம் காட்டினான்.

உள்ளே அவன் போனபோது ஷிவாஸ் ரீகல் சுவாரஸ்யத்தில் அவர் இருந்தார். பாதாம் பருப்புகளைக் கடுக்கென்று மென்று விழுங்கினார். அம்பியைக் கலக்கமான கண்ணோடு பார்த்தார். நெற்றியில் இப்போது விபூதி இல்லை. கபாலியோடு சரி.

அம்பி கெட்டிக்காரன். இரண்டு படுக்கைகளையும் சீர் செய்தான். இரண்டு ஜக் பகம் பாலை உள்ளே கொண்டு போனான். ஒன்றை அவர் படுக்கைப் பக்க கப்போர்டிலும், மற்றொன்றை அடுத்த படுக்கை கப்போர்டிலும் வைத்தான்.

ஈச்வரன் மூச் பேச் காட்டவில்லை. ''ஸார்! ஓகே!'' என்றான் அம்பி வந்து.

மனுஷன் மௌனம் காட்டியே ஒப்புதல் காட்டி விட்டார். சாப்பாடு நடப்பதற்குள் அந்த விஷயத்தைத் தயார் பண்ணி விட வேண்டும்.

டயரியை எடுத்து வெளி ஹால் போனில் உட்கார்ந்தேன். மொத்தம் மூன்று நம்பர்கள் என்னிடம் உண்டு. அந்த மூன்று பேர்களுக்கும் எங்கள் கம்பெனி 2500 ரூபாய் ஹானரேரியம் (டிஸ் ஹானரேரியம்?) கொடுக்கிறது. இது தவிர ஒவ்வொரு முறையும் வந்துபோனால் 1500 ரூபாய்.

முதல் நம்பரை டயல் செய்தேன்! பல முறை! எங்கேஜ்ட்! விடவில்லை.

என் அதிர்ஷ்டம்! போன் கிப்போ!

இரண்டாவது நம்பரைச் செய்தேன்.

''கமனு ஹியர்'' என்று குழைந்தாள்.

சுகமாக இருந்தது கேட்க. விஷயத்தை ஓர் ஆபீஸ் அறிக்கை போல் சொன்னேன்.

''இன்றைக்கு முடியாது. இன்னும் மூன்று நாளைக்கு உங்களுக்கு உதவ முடியாது!''

புரிந்து கொண்டேன். மூன்றுவதாக ஒருத்திக்கு ஜுரமாம். சொன்னாள். ஆத்திரம் வந்தது. மூன்று பேருக்கும் மூன்று காரணங்கள். நாசமாய்ப் போக. ராத்திரி அந்த ஈச்வரன் விடுவானா? முன் அறிவிப்பு வேறு செய்தாச்சே!

''ஜூலா! கொஞ்சம் கேளுங்க'' என்று என் சங்கடங்களை அடுக்கினேன்.

அவள் விடவில்லை. தன் கட்சியை மேலும் அடுக்க, நான் என் கட்சியை அடுக்க, இரண்டும் அடுக்கடுக்காகி எனக்குக் கடுக்கென்று கோபம்!

காரை எடுக்கச் சொல்லிக் கன வேகமாகப் போய் அவள்ஃப்ளாட்டில் நின்றேன்.

ஒரு மார்பின் சிலையை மெத்தையில் கிடத்தியது போல் ஜூலா.

''நல்ல ஜுரம்'' என்றாள்.

''அப்படியா?'' என்றேன் சுரத்தில்லாமல்.

''தொட்டுப் பாருங்கள்'' என்றாள்.

நான் தயக்கமானவன் என்று தெரிந்ததும் என் கையை எடுத்து நெஞ்சில் வைத்தாள். அம்மா! துடித்துக் கொண்டு கையை எடுத்தேன். 2000 டிகிரி சென்டிகிரேட் இருக்கும். ஸ்கைலாப் உருகியிருக்கும். நான் முழுசாக இருந்தேன்.

இவளை அழைக்க வந்தது தவறுதான் என்று நினைத்தேன்.

இவளே ஒரு நினைவைப் பிடித்தாள். ''மிஸ்டர் நாத்! ஒரு வழி! என் கஸின் இப்போ வருவா எய்ட்டீன் இயர்ஸ் ஸ்வீட். அனுப்பறேன்'' என்றாள்.

சம்மதித்தேன்.

ஐந்து நிமிடம் காத்திருந்தேன்.

காலிங் பெல் கேட்டது. கதவை வேகமாகத் திறந்து ஓர் இளம் பெண் திடீரென்று பிரசன்னமானாள். பெரிய பரபரப்பு.

''இவள்தான் லோனா!''

லோனாவைப் பார்த்தேன். லோ லோனாவாக இல்லை. சத்தரித்தது போல் தோற்றம். கன்னத்தில் ஒரு பரு. இரண்டு சின்னப் புருக்கள். கையெல்லாம் பூனை ரோமங்கள். பளிங்குக் கண். உதடுகள் இளம் குஞ்சுகள்.

''லோனா! அவசரம்! கெஸ்ட் ஹவுஸுக்கு இவரோட போகணும்.''

''ஓகே!'' அவள் உடை மாற்றி வரச் சென்றாள்.

''லோனாவையா, இந்தக் குழந்தையையா அனுப்புகிறாய்?''

''ஏன் அவளுக்கென்ன? நான் லோனாவுக்குக் கல்யாணமா செய்து வைக்கப் போகிறேன்? என் கஸின் என்று தெரிந்து அதற்கு யார் முன் வருவார்கள்? உங்கள் வி.ஐ.பி. ஒரு கன்னியை ஏற்பாடு செய்ததற்காக இரட்டிப்பு மகிழ்ச்சி அடைவார். லோனாவுக்கும் எனக்கும் கம்பெனி போனஸ் தர வேண்டும்!''

லோனா காரில் ஏறினாள். — ''அக்கா உங்களைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கா. உங்களை என் கற்பனையிலே நிறையப் பார்த்திருக்கேன். உங்க ஃப்ரெண்ட்ஷிப் எனக்குக் கிடைக்கணும்னு ரொம்ப நாளா நினைச்சுட்டிருந்தேன். இன்னிக்குத்தான் அந்தச் சந்தர்ப்பம்.'' அவள் குரலில் இலேசான நடுக்கம், ஏக்கம் இருந்தது.

கெஸ்ட் ஹவுஸ் போனேன்.

கோபமாக வந்தது. இத்தனையும் ஈச்வரனுக்குப் போவதில் ஆத்திரம்.

ஈச்வரன் அறையில் சமிக்ஞைகளுக்காகக் காத்திருந்தோம். அவர் விளக்குகளை அணைத்து நைட் லாம்ப் போட்டவுடன் மெள்ள அவளை உள்ளே போக விட்டேன்.

கதவை மூடினேன். காத்திருந்தேன்.

வாழ்க்கையில் நானும் ஒரு வி.ஐ.பி. ஆக வேண்டும். அல்லது சாமானியனாக இருக்க வேண்டும்.




● ''நம்ம நாட்டிலே 'இரு கட்சிமுறை' அமையணும்னு சொன்னதை அரசியல் வாதிங்க தப்பா அர்த்தம் பண்ணிக்கிட்டிருக்காங்க போலிருக்கு.''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''பின்ன என்னங்க, ஒவ்வொரு கட்சிலேயும் இரண்டு கட்சிங்க! அந்த இரண்டு கட்சிங்கள்ள இரண்டு இரண்டு 'க்ரூப்புங்க! ஒவ்வொரு 'க்ரூப்'லேயும் இரண்டு இரண்டு பிரிவுங்க இப்படி.... இதத்தான் 'டூ பார்ட்டி ஸிஸ்டம்'னு நினைக்கிறாங்க போலிருக்கு!''

● கேள்வி: ராஜ்நாராயண் எல்லோருக்கும் ஏன் 'ஸெண்ட்' தடவுகிறார் தெரியுமா?

பதில்: அவருக்குக் கவிழ்ப்பதுதான் பிடிக்கும். ஸெண்ட் பூசும்பொழுது ஒவ்வொரு தடவையும் பாட்டிலைக் 'கவிழ்ப்ப'தில் அவருக்கு அலாதிப் பிரியம்!

● எந்த நேரத்திலும் இடைத் தேர்தல்கள் வரலாம் என்ற சூழ்நிலையில் இதோ மக்கள் எழுப்பக்கூடிய இரு 'ரெடிமேட்' கோஷங்கள்:

சொன்னது: சோறும் சுதந்திரமும்
மிஞ்சியது: சேறும் தந்திரமும்

●

77 தேர்தலுக்கு முன் 'எமர்ஜென்ஸி'
79 தேர்தலுக்கு ஏன் 'அர்ஜென்ஸி'?

இப்படி மத்தியதரத்தில் இருப்பதால்தான் ஒழுக்கத்தைப் பற்றிப் பேசுகிறேன். ஒழுக்கத்துக்காக நடிக்கிறேன். சாமானியன் மாதிரி அதைக் காற்றிலே தூக்கிப் போடவும் முடியவில்லை. வி. ஐ. பி. மாதிரி அதைப் பூசி மறைக்கவும் முடியவில்லை.

இதுவரை எத்தனை முறை இங்கே வந்திருக்கிறேன்! இதே போல எத்தனை 'கல்யாணம்' நடத்தி வைத்திருக்கிறேன்! இன்று மட்டும் ஏன் என் மனம் இவ்வளவு ஓசைப் படுகிறது? ஷோனு ஒரு கன்னி என்பதானா? அல்லது அவள் என் கருத்தில் புகுந்துவிட்டதாலா?

**ப**த்து நிமிஷம் சென்றிருக்கும்.

கதவு 'டொக் டொக்' என்றது.

கதவைத் திறந்ததும், ஷோனு நின்று கொண்டிருந்தாள். கலையாமல். முழுசாக. ஆனால் கண்களில் கலவரம்.

என்ன என்று என் கண்கள் விசாரித்தன.

''அவர் உங்களைக் கூப்பிடுகிறார். எனக்குப் பயமாக இருக்கிறது.''

ஷோனு பின்தொடர நான் போனேன்.

''நாத்! ஏர்போர்ட்டில் நீங்கள் யாரை எதிர்பார்த்தீர்கள்?''

''எம். கே. ஈச்வர்.''

''அவன் எப்படி இருப்பான் என்று உங்களுக்குத் தெரியுமா? தெரியாது. ஏர்போர்ட்டில் பாஸஞ்சர் லிஸ்டைப் பார்த்தீர்கள். ஈச்வருக்காக ரிஸப்ஷனில் காத்திருப்பதாக ஸ்பீக்கரில் அறிவித்தீர்கள். நான் வந்து சேர்ந்தேன். அழைத்து வந்தீர்கள்.''

''அதற்கென்ன?''

''நான் ஈச்வர் இல்லை!''

''பின்னே?''

''வி.பி.ஐ.'' அடையாளச் சீட்டை எடுத்துக் காட்டினான்.

''மை காட்!'' என் நெற்றியை வலக்கரம் பற்றியது.

---




''ரொம்ப நாளாகவே இந்த மாதிரி நீங்க கவர்ன்மெண்ட் அஃபிஷியல்ஸ்களைக் கைக்குள் போட்டுக் கொண்டு காரியங்கள் சாதிப்பதை உணர்ந்து வந்தோம். சாட்சியத்தோடு பிடிக்கக் கடைசி நிமிஷத்தில் ஈச்வரை அங்கே வளைத்துப் போட்டு யாருடனும் தொடர்பு கொள்ள முடியாமல் காவலும் வைத்துவிட்டு அவன் டிக்கெட்டில் நான் வந்தேன்! அகப்பட்டுக் கொண்டீர்கள்.''

''சாட்சியம்?''

''இங்கு நான் வந்ததிலிருந்து பேசப்பட்டதெல்லாம் டேப்பில் பதிவாகியிருக்கிறது. கடைசியாக இந்தக் குழந்தை சொல்லியதெல்லாம் கூட.''

ஷோனுவைத்தான் குறிப்பிட்டான்!

''இப்ப என்ன நடக்கும்?''

''நடப்பது என்ன? இரண்டு பேருக்குமே விலங்கு மாட்ட வேண்டியதுதான்.'' அவர் பாக்கெட்டில் சங்கிலி கலகலத்தது.

ஷோனு திடீரென்று என்மேல் பாய்ந்தாள். என் முகத்தைப் பிறாண்டி, தோளைக் கடித்து, ஓவென்று கோபத்துடன் கத்தி.....

''யூ ஸ்கௌண்ட்ரல் என்னை இந்த நிலைக்கு ஆளாக்கிட்டியே!''

அவளை அடக்கச் செய்ய ஒரே வழிதான் தென்பட்டது. அப்படியே இறுகக் கட்டி அணைத்தேன். ''டேக் இட் ஈஸி பேபி!'' அசைய விடாமல் ஒரு கரம் சிறைப்படுத்த இன்னொரு கரம் முதுகில், கழுத்தில், தோளில் தட்டிக் கொடுக்க அவள் சற்று நேரத்துக்குப் பிறகு கோபம் தணிந்து மெல்ல விசும்பிக் கொண்டிருந்தாள் என் தோள் மீது. இவ்வளவு நெருங்கி அவள் இருந்தும் அவள் உடலை அடைகிற வெறி என்னுள் இப்போது இல்லை. பாதுகாக்கும் ஆர்வம்தான். மெல்ல உட்கார்த்தினேன்.

''ஸார், நாங்க வெறும் கருவிகள். எங்களை இயக்குகிறவர்கள் பிப்பிள் அட் தி டாப்!''

''தெரியும். உங்க எம். டி. மாஜிஸ்திரேட் முன் வந்து ஜாமீன் கட்டித்தான் வெளியே வரணும்.''

''தெரிந்துமா எங்களைத் தண்டிக்கப் போறீங்க?''

''அப்ரூவரா மாறிடுங்க. வி. பி. ஐ.க்காகச் சாட்சி சொல்லுங்க.''

யோசித்தேன். ''ஓ. கே. ஆனா ஒரு நிபந்தனை. எனக்கு வேறு உத்தியோகம் நீங்க பார்த்துத்தரணும்.''

''சரி, ஆனா என் தரப்பிலும் ஒரு நிபந்தனை!''

''என்ன?''

''இந்தக் குழந்தையை இப்படியே கெட்டலைய விடாதே. வாழ்நாளைக்கும் ஆதரவு கொடு. ஆர் யூ மேரீட்?''

''நோ, ஷோனுவுக்காகத்தான் காத்திருக்கிறேன்!''

ஷோனு மறுபடியும் என்மீது சாய்ந்தாள்; வெறி கொண்ட தாக்குதல் அல்ல. பூனைக் குட்டியாக என் கரங்களில் சுருண்டுகொண்டாள்; என் கன்னங்களில் பனி மலர்கள் சொரிந்தன,

# வைரங்கள்

## சுஜாதா



### முன் கதை

கல் உடைக்கும் 'க்வாரி'க்கு அருகே புன்னை கிராமம் லாரிமுக்கு. ஜல்லி அள்ள வரும் லாரிக் காரர்களின் தேவைக்கு ஒரு மக்கடை வைத்திருந்தான் பெரியசாமி. கொஞ்சம் நிலமும் இருந்தது. அவன் மனைவி திலகம் அழகி. கட்டான உடல். இளமைப் பூரிப்பில் மின்னும் அவள் அழகில் லாரி டிரைவர் தாஸுக்கு ஒரு கண். திலகத்துக்கு ஒரு பெண் மனோகரி - செவிட் டூமை. குழந்தை மனோகரிக்கு ஓர் அழுக்குக் கல் கிடைக்கிறது விளையாடும்போது. தாஸின் லாரி க்ளீனர் பையன் காதருக்கு அந்தக் கல்லைத் தன் அன்புப்பரிசாகத் தருகிறாள் மனோகரி.

ஒரு நாள் தாஸ் மக்கடைக்கு வந்தபோது பெரியசாமி இல்லை. திலகம் மட்டும் இருக்கிறாள். அவளுக்கு ஒரு புதுப் புடவையைப் பரிசாகத் தருகிறான் தாஸ். திலகம் அதை ஏற்க மறுக்கிறாள். இதற்குள் பெரியசாமி வருகிறான். அவனைத் தன் ஊருக்குக் கூப்பிடுகிறான் தாஸ். ஊர் சுற்றிக் காட்டுவதோடு குழந்தைக்கு வைத்தியம் செய்து பேச வைத்துவிடலாமென்று கூறுகிறான். ஆனால் பெரியசாமி தான் கடையை விட்டு வருவதற்கில்லை என்று கூற, தாஸ் திலகத்தைப் பார்த்தபடியே லாரியைக் கிளப்புகிறான். அவளோடு பெரியசாமியும் லாரியில் தொத்திக்கொள்கிறான். வழியில் சாராயக் கடையில் இறங்கிக் கொள்ள.

ராலிமுக்கிலிருந்து வைரம் காதர் மூலம் கோவைக்கு வருகிறது. இனி தொடருங்கள்.

## அத்தியாயம் 3
## நான்தான் எழுப்பினேன்

வைரம் என்பது வெறும் கல்தான். ஆனால் பிரத்தியேகமான கல். கோடிக் கணக்கான வருஷங்களுக்கு முன் பூமித் தணலின் மிக அதிகச் சூட்டிலும் அழுத்தத்திலும் வைரத்தின் அணுக்கள் ஒழுங்காக்கப் பட்ட கட்டிட அமைப்பில் கனிந்து ஜொலிக்கும் பொருள்களாயின.

காதரிடம் அந்தக் கல் சரியாக ஒரு வாரம் தங்கி யிருந்தது. பட்டறையின் ஓரத்தில் காதருக்கு உரித்தான ஒரு மூலையில் ஒரு ஷெல்ஃபில் அதை நாம் விட்டுப் போனது ஞாபகம் இருக்கலாம். அதற்கப்புறம் காதர் கம்மர்கட்டு மிட்டாய் வாங்கி அது மிகவும் கெட்டியாய் இருக்க அதை உடைக்க, அந்த வைரக் கல்லைப் பயன்படுத்தினான். அப்போது கல்லுக்குள்ளே ஒரு பளபளப்புத் தெரிய, காதர் அதை உற்றுப் பார்த்தான். நாக்கால் நக்கிப் பார்த்தான். கண்ணாடி என்று நினைத்து உடைத்துப் பார்த்தான். உடையவில்லை. ரோடிலிருந்து ஒரு சரளையைப் பொறுக்கிவந்து அதால் உடைத்துப் பார்த்தான். சரளைக் கல்தான் உடைந்தது. ''கெட்டியாக இருக்குதாம்ல'' என்று சொல்லிக் கொண்டு இரண்டு உள்ளங் கைகளுக்கும் இடையில் கொடுத்து அழுத்திப் பார்த்தான். கையில் ரத்தம்.

கோபம் வந்து கவரில் அதால் காதர் என்று கிறுக்கினான். காதருக்கு 'ர்' போட வராது. சற்றே ரஷ்யத்தனமாக இடம் வலமாகத் திரும்பும். கல்லைத் தூக்கிச் சாக்கடையில் எறிந்துவிடலாம் என்று கையை உயர்த்தின சமயம் சட்டென்று அந்தக் கல்லைக் கொடுத்த ஊமைப் பெண்ணின் ஞாபகம் வந்தது. கல்லைத் திரும்பவும் அந்த ஷெல்ஃபில் வைத்து விட்டான்.

பட்டரைக்கு முன்புறத்தில் எஜமான் அகர்சந்தின் வீடு இருந்தது. இந்தச் சந்திலிருந்து பெரிய வீட்டுக்குப் பின் வாசல் வழியாகப் பாதை உண்டு. காதர் இங்கே லாரி க்ளீன் செய்துவிட்டுப் பின்புறமாக முதலாளி வீட்டுக்குச் சென்றான். அங்கு கொஞ்சம் எடுபிடி வேலை செய்தால் சப்பாத்தி கிடைக்கும். பசு மாட்டுக்குப் போடுவதற்குப் பதிலாக அவனுக்குத் தருவாள் எஜமானி அம்மாள்.

காதர் மெதுவாக நுழைந்தான்: முதலில் கழிவிடம். அப்புறம் மாட்டுத் தொழுவம். கண்களில் மையிட்டது போல அழகாக விழித்துக் கொண்டு காராம் பசு கட்டியிருந்தது. பக்கத்தில் புத்தம் புதுசாகப் கன்றுக்குட்டி. நக்கப்பட்டு நக்கப்பட்டுக் கீழே விழுகிற ஸ்திதியில் இருந்தது. வைக்கோல் போர். இறைவு பம்ப் செட். பாத்ரூம். அப்புறம் இரண்டு மூன்று படி ஏறினால் சிமெண்ட் தாழ்வாரம். அதற்கப்புறம் வீட்டின் முன் பகுதி துவங்கும். அதுவரைதான் காதருக்கு அனுமதி.

எஜமானர் ராஜஸ்தானத்துத் தொங்கு மீசை மார்வாரி. இங்கே ஸெட்டில் ஆகி

''நல்லாத்தான் தமிள் பேசறது''. சுத்த சைவம். காசு கெட்டி. இவ்வளவு செல்வம் இருந்தாலும் பித்தளைப் பாத்திரத்தைக் கண்டால் பத்து ரூபாய் கொடுக்கும் அடகு புத்தி போகாது. சிவப்புசிவப்பாக மூன்று பெண்கள்; ஒரே ஒரு மகன்.

''எஜமான்'' என்றான் காதர்.

''கௌன்? யாரு?''

''காதர்ங்க எஜமான். எதுனாச்சியும் வேணுமா?''

எஜமானர் மனைவியைக் கூப்பிட்டு ஹிந்தியில் பேச, கலர் கலராகப் பாவாடை கட்டிக் கொண்டு சிலுங் சிலுங் என்று எஜமானி வந்தாள். வயிறு தெரிந்தது. மார்பு தெரிந்தது. சிக்கலான நகைகள் உடம்பில் ஓர் அங்கம் பாக்கி வைக்காமல் அணிந்திருந்தாள். முகம் ஏறக் குறைய மூடியிருந்தது.

''காதர் நல்லார்க்கியா?''

''நல்லாருக்கேம்மா.''

''சின் பொண் பள்ளிக்கூடத்திலிருந்த்கூட்டி வந்த்ரு.''

''சரிம்மா.''

''மாவ் மிஷின் போயி ஆட்டா அரைச்சிட்டு வந்த்ரு. எட் போஸ்ட் கார்ட் வாங்கி வந்த்ரு.''

''சரிம்மா.''

''போப்போ. மாட்க் வக்ல் போட்ரு.''

''சரிம்மா.''

''இந்தா வாங்கிக்க'' என்று இரண்டு கோதுமை ரொட்டியும் உருளைக் கிழங்குக் கறியும் கொடுத்தாள். காதர் அதை 'டாங்க்ஸ்ம்மா'' என்று வாங்கிக் கொண்டு காகிதத்தில் சுற்றிப் பாக்கெட்டில் அடைத்துக்கொண்டான். மாட்டுக் கொட்டகைக்குச் சென்றான். வைக்கோலைப் பிரிக்கையில் பக்கத்தில் சரசரவென்று சப்தம் கேட்கத் திகிலடைந்து ஒதுங்கி, ''யாரு! யாரு!'' என்றான். வைக்கோல் போர் அசைந்தது.

பின்புறத்திலிருந்து சின்னி வெளியே வந்தாள். சற்றுக் கழித்து சின்ன சவுக்கார் எனப்படும் சின்ன எஜமானர் வெளியே வந்தார். சின்னி தன் பாவாடை தாவணியைச் சரிப்படுத்தி ஊக்குப் போட்டுக் கொண்டாள். அவள் தலையெல்லாம் வைக்கோலாக இருந்தது. சின்னவர் சட்டைப் பட்டன்களைப் போட்டுக் கொண்டார். அவர் புஸு புஸு தலையிலும் வைக்கோல்.

காதர் சிரித்துவிட்டு ஓடிவிட்டான்.

**கா**தர் பட்டறையில் இருந்தான். லாரி வெளியே போயிருந்தது. அமல்ராஜ் டிரைவர் எடுத்துப் போயிருந்தார். அவன் வருகிற நேரம்தான். ராத்திரி கேரளா போகிறார்கள்: அப்போது சின்ன எஜமானர் வந்தார். இது வரை அந்தப் பக்கமே அவர் வந்ததில்லை.

அவர் அகர்சந்தின் ஒரே மகன். பெயர் ப்ரேம். பி.யூ.சி. வரைதான் படிப்பு. அதுவும் ஜில்லா ஜில்லாவாகக் காரியஸ்தன் பரீட்சைப் பேப்பர்களைத் துரத்திப் பாஸ் பண்ண வைத்த படிப்பு. படிப்பு வேண்டாம் தகப்பனின் பிஸினஸைப் பார்த்துக் கொண்டால் போதும். நாலு லாரி ஓடுகிறது. அது தவிர துபாயில் ஓர் ஏஜன்ஸி இருக்கிறது. எட்டு வீடுகள் சொந்தம். வேளாண்மைப் பல்கலைக் கழகம் தாண்டினதும் ஏக்கராக் கணக்கில் இன்கம் டாக்ஸுக்கென்றே ஒரு பண்ணை. டவுனில் சென்ட்ரல் கொட்டகை அருகில் ஒரு பெரிய பழைய கட்டிடத்தை வாங்கியுள்ளார். இடித்து ஒரே காம்பவுண்டில் ப்ரேம், சரோஜ், சர்கம் என்று மூன்று தியேட்டர் கட்டப் போகிறார்.

ப்ரேமின் பாண்ட் தரையில் புரண்டது. நல்ல சிவப்பு. வாயில் பான் அடக்கி உதடுகளில் வெற்றிலை ரத்தம். அரும்பு மீசை. சற்றுப் பூனைக் கண்.

பட்டறைக்குள் அவன் வந்ததும் காதர் எழுந்து நின்றான். ''தாஸ் இன்னும் வல்லிங்க'' என்றான். தன்னைப் பார்க்கச் சின்ன எஜமானர் வந்திருப்பார் என்று அவன் நினைக்கவில்லை.

''சோக்ரா இங்கே வா!''



தயங்கிக் காதர் அருகில் சென்றான்.

சற்றும் எதிர்பாராமல் தேள் கொட்டுவது போல் சுளீர் என்று காதரின் கன்னத்தில் அறை விழுந்தது. ''அம்மா!'' என்று உட்கார்ந்தான். உட்கார்ந்தவனை உடனே அந்த ராஜஸ்தானத்து இளைஞன் செருப்புக் காலால் உதைத்தான். காதர் உருண்டு அப்பால்

விழுந்தான். வாய்க்குள் ரத்தம் கசிந்தது. தப்பிக்கும் உணர்வு தலையாயதாகக் காதர் எழுந்து ஓட முற்பட்டவனைச் சுலபமாகப் பிடித்து ''இனி வீட்டுக்குள்ளாற வருவியா?'' என்றான்.

''பெரியம்மா தாங்க கூட்டுச்சு. அடிக்கா தீங்க அடிக்காதீங்க அய்யய்யோ, யம்மாடி!''

''சிரிக்கிறியா? இனி வீட்டுக்குள்ளே கால் வெப்பியா?''

''இல்லிங்க, இல்லிங்க!''

இளைஞன் அந்தக் குழந்தையை இடுப்பில் ...டைக்க ஒரு தடவை காதர் சுத்துவிட்டுத் திரும்பினான்.

தாஸ் வந்தான். ...ரேம் அவனை உத ...த் தள்ளினான். ...சப்பாத்தி உரு ...லைக் கிழங்கு



கொஞ்சம் தெறி இன்ஜின் ஆயிலுடன் கலந்தது. காதர் தரையில் உட்கார்ந்து சம்பிரமமாக அழ ஆரம்பித்தான். முகம் தெரியாத அம்மா, பெயர் தெரியாத அப்பா, இழந்துபோன அடுத்த வேளைச் சோறு, அடி பட்டதின் உண்மையான வலி எல்லாவற்றுக்கும் சேர்த்து வைத்து விசித்து விசித்து அழுதான்.

''என்னங்க செஞ்சான் பையன்? டேய் காதர்! திருடிட்டியா?''

''தாஸ், இந்தப் பையன் ஊடு எங்கே?''

''வீடு கிடையாதுங்க.''

''பின்னே எங்க தங்கியிருக்கான்?''

''அவன்பாட்டுக்குப் பட்டறையில் ஒரு மூலையிலே முடங்கிக் கெடப்பான். ஏங்க?''

''முதல்லே வெளியே விரட்டு!''

''நல்ல கிளீனருங்க! என்ன செஞ்சான்? ஏய், பேமானிப் பயலே என்னடா செஞ்சே? எசமான் கால்லே உளுடா!''

''என்னைப் போட்டு.... என்னைப் போட்டு .... எதுக்காக அடிச்சாருன்னே தெரியல்ல தாஸண்ணே. இத பாருங்க! ரத்தம் அ...அ... அ....!'' என்று அழுதான் காதர்.

''போனாப் போவுதுங்க. விட்டுடுங்க!''

''விடுவதாவது! ஏய் இதானே உன் இடம்? தூக்குடா எல்லாத்தியும்.''

தாஸின் சொந்த மூலைக்குச் சென்று ப்ரேம் அங்கிருந்த தட்டு முட்டுச் சாமான்கள் எல்லாவற்றையும் விசிறி எறிந்தான்.




'எக்ஸ்டென்ஷன் டிக்கட்' என்று இப்போதெல்லாம் வழங்கி வருகிறார்கள். ரயிலில் சீசன் டிக்கட் வைத்திருப்பவர்களுக்கும் பயனுரும்.

உதாரணமாக அம்பத்தூரிலிருந்து பெரம்பூர் வரைக்கும் சீசன் டிக்கட் வைத்திருக்கும் ஒருவர், ஒரு நாள் அம்பத்தூரிலிருந்து சென்டிரலுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. அவர் அம்பத்தூர் ஸ்டேஷனில் டிக்கட் வழங்குபவரிடத்தில் தமது சீசன் டிக்கட்டைக் காண்பித்தால், சென்ட்ரல் வரை போகச் செல்லுபடியாகக் கூடிய இந்த டிக்கட்டை வழங்குவார். கட்டணம், பெரம்பூரிலிருந்து சென்டிரலுக்கு ஆகும் அதே கட்டணம் தான். அவர் அனாவசியமாகப் பெரம்பூர் ஸ்டேஷனில் இறங்கி கௌண்டருக்கு ஓடி, சென்ட்ரலுக்கு டிக்கெட் வாங்கி அதே ரயிலில் ஓடி வந்து ஏறவேண்டாம்.

- பிரபு

---

ப்ரேம் அந்தக் கல்லே எடுத்தான்.

''வேண்டாங்க. அந்தக் கல்லேக் கொடுத்திடுங்க.''

ப்ரேம் அந்தக் கல்லேத் தூக்கி எறிய இருந்தவன் தயங்கி அதைப்பார்த்தான். அழுக்காக இருந்தாலும் அதில் ஏதோ ஓடுவது அவனேக் கவர்ந்தது மின்னி போல. ப்ரேம் அதைத் தன் பைக்குள் போட்டுக் கொண்டான்.

''தாஸ் இவனே உடனே வேலேயிலிருந்து நீக்கிட்டு வேறே சோக்ரா, வெச்சுக்கோ. ஓடுரு!.... ஓடுருன்னு!''

''டேய், போடா'' ன்னுன் தாஸ்.

காதர் வெளியே சென்று வாசலில் நின்று பார்த்தான்.

''போடான்னு!''

தெருக் கோடிக்குச் சென்று பிளாட்பாரத்தில் உட்கார்ந்து அழுது கொண்டே முழங்கால் காயத்தில் எச்சில் வைத்துத் தேய்த்து அருகில் உள்ள கடையில் சுண்ணும்பு வாங்கி அப்பிக் கொண்டான்.

''அப்படி என்னதாங்க செய்தான்'' என்ருன் தாஸ்.

பதில் சொல்லாமல் ப்ரேம் அந்தக் கல்லேப் புரட்டிப் பார்த்துக் கொண்டே சென்ருன்.

''என்னடா செஞ்சே?''

''ஒண்ணுமே செய்யல அண்ணே!''

''ஒண்ணுஞ் செய்யாட்டாபின்னே ஏண்டா இந்தச் சவுட்டு சவுட்டுரூரு?''

''தெரியலீங்களே!''

''பாவி! கன்னம் உதடு எல்லாம் வீங்கிப் போச்சு. ரெண்டு நாளேக்குத் தலேமறைவா இரு. அவன் கண்ணிலேயே படாதே.''

''எங்க தூங்கறது தாஸண்ணே?''

''செல்லா மெடிகல் வாசல்ல தூங்கிக்க. அப்புறம் சரியாயிடும். லாரி ட்ரிப் அடிச்சுட்டு ராத்திரி வந்துரும். நார் சீட்டு ஒண்ணு எடுத்துக்க. அப்புறம் ஒரு போர்வை தரேன்!''

•

காலே காதர் உற்சாகமாகவே இருந்தான். சின்னி பிள்ளேகளே இஸ்கோலுக்கு அழைத்துச் செல்கையில் காதரைப் பார்த்தாள்.

''காதரு! நேத்திக்கு என்னடா பாத்தே?''

''ஒண்ணுமில்லக்கா.''

''நீ பார்த்ததை யார்கிட்டயும் சொல்லிடாதே?''

''மாட்டேங்க்கா.''

''இந்தா. வெச்சுக்க. முட்டாய் வாங்கித் தின்னு.'' சின்னி அவன் கையில் ஒரு ரூபாயை வைத்துவிட்டுச் சென்ருள்.

சின்னியைப் பார்த்தான் காதர். புதிய வார்ப்புகளில் அந்தப் பொண்ணு நடக்கிறது போல் நடக்கிருள். இன்னும் நெளி அதிகம்!

காதர் தன் தாடையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டான். வலித்தது.

அடிபட்ட காரணமும் புரிந்தது!

சனிக்கிழமை ராஜமுக்கு ஜல்லி ட்ரிப் அடிக்க மறுபடியும் லாரி சென்றது. பெரியசாமியும் தாஸும் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து டீ சாப்பிட்டார்கள். க்வாரியில் க்ரஷர் பழுதாகி விட்டதால் போதிய அளவு ஜல்லி இல்லாததால் தாஸ் இரவு தங்கும்படியாகி விட்டது.

பெரியசாமி கேபுல்லில் இருந்தான்.

தாஸ் நிதானம் தவறுமலிருந்தான். கணவன் அப்படியே கயிற்றுக் கட்டிலில் கிடக்க, மெள்ள எழுந்து தாஸ் கடைக்குள் வருவதைத் திலகம் பார்த்தாள். ஓரத்தில் படுத்திருந்த காதரைச் சப்தம் போடாமல் உலுக்கி எழுப்பி உட்கார வைத்தாள்.

''திலகம்! திலகம்! கொஞ்சம் என் தாவத்துக்குத் தண்ணி கொடுக்க மாட்டியா?''

காதர், ''நான் தரேன் அண்ணே தண்ணி!'' என்ருன்.

''தத்தி இன்னுமா முளிச்சுக்கிட்டு இருக்கே!'' என்ருன்

''இல்லே. நான்தான் அவனே எழுப்பினேன்'' என்ருள் திலகம்.

• • •

கோவை கல்லூரியில் ஸிவில் இன்ஜினியரிங் படிக்கும் ராதாகிருஷ்ணன் ப்ரேமின் பி.யூ. ஸி. காலத்து நண்பன். அடிக்கடி அவனேச் சந்திக்க வருவான். முக்கியமா ப்ரேமின் தங்கைகள் யாராவது தென்படுகிருர்களா என்று நாிசிக்க வருவான்.

ராதாகிருஷ்ணன் ஞாயிற்றுக் கிழமை வந்தபோது ப்ரேம் அந்தக் கல்லே அலங்காரமாக ஆராய்ந்து கொண்டிருந்தான். ராதாகிருஷ்ணன் அந்த ரூம் சாமான்கள் எல்லாம் தன்னுடையது போல் சுதந்திரமாகப் புழங்கிருன். வெளி நாட்டு காஸெட் போட்டு 'ஒலி பிஸா' கேட்டான்.

''இந்தக் கல்லு பாத்தியா ராதா?''

''என்ன?''

''உள்ளுக்குள்ளே கலர் தெரியுது பாரு.''

ராதா வாங்கிப் பார்த்தான்.

''இதை என்கிட்டக் கொடு ப்ரேம். அப்பாகிட்டக் காண்பிக்கிறேன்.''

''இது என்ன கல்லு?''

''கண்ணுடி. இல்லே படிக்காரம். அல்லது க்வார்ட்ஸ். எங்கப்பா கரெக்டா சொல்லிடுவார். அவரு ரிடையர்டு ஜியாலஜிஸ்ட்.''

''அப்ப இதை எடுத்திட்டுப் போய்க் காட்டிடு. எதுனச்சியும் இருந்தா எனக்குச் சொல்லு. இல்லே, விசிறிக் கடாசிரு.''

''உம்'' என்ருன் ராதாகிருஷ்ணன்.

(தொடரும்



விடியற்காலத்திலிருந்தே கறுப்புக் குருக்களின் உடல் குளத்தில் மிதந்து கொண்டிருந்தது. கண் பார்வைக்கு எட்டும் தூரத்தில் கட்டை போலக் கிடந்த அவர் உடல் பத்துப் பதினொரு மணி வாக்கில் நடுக்குளத்துக்குப் போயிருந்தது.

நடுக் குளத்தில் ஒரு பெரிய தீவு போல அல்லிக் கொடி படர்ந்து அந்த உடலை மறைத்துக்கொண்டிருந்தது.

குளத்தின் கீழ் கரையிலும் தென் கரையிலும் ஜனங்கள் கூட்டமாக நின்று வேடிக்கை பார்த்து விட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள். புதிது புதிதாகப் பலர் வந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

முதன் முதலில் நொண்டி மணிதான் அதைப் பார்த்து விட்டுப் பெரிதாகக் கூச்சல் போட்டான்.

''அதோ ஒரு பிணம் மிதக்கிறது! அதோ• அதோ!'' என்று கரையில் ஏறி நின்றபடி கத்தினான்.

அவன் சுட்டிக் காட்டிய திசையை அங்கிருந்தவர் பார்த்தார்கள். கறுப்பாக முகம், மார்பு, முழங்கால், பாதங்கள் தெரிய ஓர் உடல் கால்வாசி தூரத்தில் மிதப்பது தெரிந்தது. சற்று நேரத்தில் சுற்றி யிருந்த

> கதையின் எழுத்தாளன் ஏதேனும் ஒரு கருத்தை மறைமுகமாக வலியுறுத்த வேண்டும். இல்லையென்றால் நெருப்பின் தீயே அதனை அறிவிக்கும் மணியை விளை யாட்டாக அடிக்கின்ற குழந்தையாக அவன் ஆகின்றான்.
>
> —சீன் ஓபெல்யன்

# யோகம்

ஆர்வி

தெருக்களுக்கெல்லாம் இந்தச் செய்தி பரவி விட்டது. கூட்டம் சேர்ந்து விட்டது.

தர்மூப் பாட்டி என்கிற தர்மாம்பாள் அம்மாள் குரல், மேல் படிக்கட்டிலிருந்து கேட்டது.

''யார் சொன்னது பிணம் மொதக்கிறதுன்னு? நானும் என்னடாப்பான்னுன்னு ஓடி வந்தேன். ஏன்டி பிரகதம் உனக்குக் கூடத் தெரியலையா? கண் அவிஞ்சு போச்சா? புதுசா வந்து சேர்ந்திருக்கிறதுகளுக்கு வேணாத் தெரியாது. உனக்கும்மா தெரியாமப் போயிடுத்து? என்னமோ வேடிக்கையா வாயைப் பிளந்துண்டு நிக்கறியே!''

தர்மூப் பாட்டியின் குரல் ஒலிபெருக்கிக் குரல். கிட்டத்தட்ட ஒரு பர்லாங்கு தூரம் எதிர்க் கரை வரையிலும் கரகரவென்று கணீரென்று கேட்கும். குரலுக்குப் பொருத்தமான தாட்டியான பெரிய உடம்பு. அந்த உடம்புக்குப் பாந்தமான உயரம். முன் பற்கள் இரண்டு விழுந்து வாய் பொக்கையாக இருந்தது. அதற்கு ஈடாக இரண்டு இதழ்க் கடையிலும் இரண்டு கூரான கோரைப் பற்கள். பாட்டியை அருகில் சென்று பார்த்தால் யாருக்குமே கொஞ்சம் பயமாகத்தான் இருக்கும்.

பாட்டியின் பேச்சு படித்துறையில் சட்டென்று ஓர் அமைதியை ஏற்படுத்தியது. பாட்டியின் பேச்சுக்குக் குறுக்கே யாரும் பேச முடியாது. ஆகவே அத்தனை பேரும் மேடைமேலே நின்ற பாட்டியை அண்ணாந்து பார்த்தபடி நின்றார்கள்.

''இதோ பாருங்கோ! அது பொணமும் இல்லே, பிரேதமும் இல்லே. எல்லாரும் அவா அவா வேலையைப் பார்த்துண்டு போய்ச் சேருங்கோ! சும்மாவானும் வெறும் கழுதைப் புரளி பண்ணிண்டிருக்காதேங்கோ... அபவாதமாப் பேசினா மகா பாவம்! ஜலஸ்தம்பம் பண்ணிண்டிருக்கிறவரைப் போய்ப் பொணம் மொதக்கறதுன்னு எல்லாரும் வேடிக்கை பார்த்துண்டிருக்காளே — பொணம் — னம்னு சொன்னாப் பாவமில்லையா? ஜலஸ்தம்பம்னு தெரியாதவாளுக்குத் தெரிஞ்சவா சொல்ல வேண்டாமோ?''

கறுப்புக் குருக்களின் பெயரைக் கேட்டதும் படித்துறைக் கூட்டத்தில் ஒரு சலசலப்பு உண்டாயிற்று. அவர் பல கலைகள் கற்றுத் தேர்ந்தவர் என்று ஊரில் எல்லோருக்கும் தெரியும். ஆனால் தண்ணீரில் பல மணி நேரம் இப்படிக் கட்டையாக மிதக்கக் கூடியவர் என்பது இதுவரை பல பேருக்குத் தெரியாது. இப்படி எதற்காக மிதப்பது என்றும் தெரியாது. இருந்தாலும் இது என்னவோ பெரிய அதிசயமாக இருந்தது. எந்த நிமிஷமும் என்ன நடக்குமோ என்கிற எதிர்பார்ப்பில் கூட்டம் குறையும் வழியாகத் தெரியவில்லை. அப்போது... தர்மூப் பாட்டியின் குரல் கேட்டது.

''ஊரிலே எங்கே, என்ன தப்பு—நடக்கக் கூடாதது நடந்துதோ, இந்த மனுஷன் அதுக்குப் ப்ராயச்சித்தம் பண்ணிக்கிறாப் பலே இருக்கு!''

பாட்டி சொன்னது என்ன என்று யாருக்கும் சரியாக விளங்கவில்லை. தண்ணீரில் மூச்சை அடக்கிக் கொண்டு கிடப்பது ஜால வித்தையாக இருக்கலாமே தவிர, பிராயச்சித்தமாக எப்படி இருக்கும்? அதையும் தவிர, யாரோ செய்த தப்புக்கு இவர் பிராயச்சித்தம் செய்துவிட்டால் சரியாகி விடுமா? நம்பும்படியாக இல்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. மற்றவர்களால் மணிக் கணக்கில் மூச்சை 'தம்' பிடித்துக் கொண்டு தண்ணீரில் இப்படிக் கிடக்க முடியுமா? அப்படிப்பட்டவர் சொல்வதை நம்பாமல் என்ன செய்ய?

கறுப்புக் குருக்கள் இப்படி ஏதாவது செய்யக் கூடியவர் என்று பொதுவாக எல்லோருக்குமே தெரியும். மற்றவர்கள் நினைத்துக்கூட பார்க்க முடியாத காரியத்தை அவர் சர்வ சாதாரணமாகச் செய்து விட்டு, வாயைத் திறக்காமல் போய் விடுவார். எதிர்ப்பு இருக்குமே, வம்பு வளர்ப்பாங்களே என்று அவர் கவலையே படமாட்டார். இன்றைக்கு என்று இல்லை; இருபது முப்பது வருஷங்களுக்கு முன்புகூட இதே கதைதான்.

வேம்பையனை ஒன்றரை இரண்டு வயதில் கொண்டு வந்து வீட்டிலேயே வைத்து வளர்க்க முற்பட்டபோது யார் யாரோ எதிர்த்துப் பார்த்துத் தடுத்தார்கள். கோயிலிலேயே ஆட்சேபித்தார்கள். காசாங் காட்டிலே கள்ளிகள் பொறுக்கும் கன்னிக்கும் காவல் மேஸ்திரிக்கும் இருட்டுத் தலமாகப் பிறந்த பிள்ளை என்று ஒரு வதந்தி இருந்தது. கோயிலில் பூஜை செய்து கொண்டு இந்த மாதிரி ஒரு பிள்ளையை வீட்டிலேயே வைத்து வளர்க்கலாமா என்று கேள்வி வந்தது. கறுப்புக் குருக்கள் ஊமை மாதிரி சிரித்து விட்டுச் சும்மா இருந்து விட்டார். அந்தச் சிரிப்பு ஆயிரம் சமாதானம் சொல்வதை விடச் சக்தியுள்ளதாக இருந்தது.

எல்லோருக்கும் கசப்பாக இருந்த அந்தப் பிள்ளைக்கு அவர் வேம்பு என்று பெயரிட்டு வளர்த்தார். பள்ளிக்கூடத்தில் தம் சொந்தப் பையனோடு கூடவே அவனையும் சேர்த்துப் படிக்க வைத்தார். அவனுக்குப் படிப்பு ஏறவில்லை. உடம்பில் முறுக்குத்தான் ஏறி வந்தது. வயதில் பெரியவனான அவர் மகன் சோமசுந்தரம் சோனியாக இருக்க, வேம்பு மட்டும் ஒதியன் போத்து மாதிரி வாட்டசாட்டமாய் வளர்ந்திருந்தான்.

வானத்தில் நாற்பது கோடி நட்சத்திரங்கள் இருப்பதாகச் சொல்லுங்கள், மனிதன் கண்ணை மூடிக் கொண்டு நம்புவான். 'இந்த பெஞ்சில் இப்போதுதான் பெயிண்ட் அடித்திருக்கிறார்கள்' என்று சொல்லுங்கள், தன் கையால் தொட்டுப் பார்த்து விட்டுத்தான் நம்புவான்.

— பெஞ்சமின் — பூ.சு



கருப்புக் குருக்கள் பெயரைத்தான் எல்லாருக்கும் தெரியுமே தவிர, அவரை நேரில் பார்த்தால் பாதிப் பேருக்கு அடையாளமே தெரியாது. நீர்க் காவி ஏறிய பத்தாறு கட்டிக் கொண்டு எப்போது பார்த்தாலும் இருபது முப்பது நாள் தாடியுடன், கறுத்த மேனியும், நரைத்துச் சிறுத்த குடுமியுமாக அவர் வெறும் பாமரனைப் போலவே இருந்தார். ஆகம சாஸ்திரத்தில் அவர் ஓர் 'அதாரிட்டி' என்று சத்தியம் செய்தால்கூட யாரும் நம்ப மாட்டார்கள்.

கருப்புக் குருக்கள் எங்கே போய், யாரிடம் கற்றுக் கொண்டாரோ என்னவோ, அவருக்கு மந்திரிக்க நன்ருக வரும். கை வைத்தியமும் ஜோசியமும் பார்ப்பார். விசேஷ விழா நாட்களில் அவர் உற்சவ மூர்த்திகளுக்கு அலங்காரம் செய்தால் இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலத் தனியாகத் தெரியும். சங்கீதத்தில் அவருக்கு அபார ஞானம்.

வேம்பையனுக்குக் கிட்டத்தட்ட பதினன்கு வயதானபோது, கருப்புக் குருக்கள் கோயில் பூஜைக்குப் பையனை அனுப்பி விட்டு வீட்டிலேயே இருந்தார். வீட்டிலேயே ஜபம், தபம் பூஜை என்று அவருக்கு நேரம் சரியாக இருந்தது. அவர் வீட்டிலேயே இருக்கிருர் என்பது தெரிந்து பல தாய்மார்கள் பிள்ளைகளை எடுத்துக் கொண்டு மந்திரித்து விபூதி வாங்கிக் கொண்டு போக வந்து கொண்டிருந்தார்கள்.

வேம்பையன்தான் வேப்பிலை பறித்து வரவும் விபூதி மடலை நிரப்பவும் உதவியாக இருப்பான்.

மந்திரிப்பதற்காகட்டும், மற்றது எதற்காகட்டும் கருப்புக் குருக்கள் காசு வாங்குவதில்லை என்று ஊரில் எல்லோருக்குமே தெரியும். இருந்தாலும் சில பேருக்கு அவரிடம் என்ன காரணமோ ஒரு பொறுமை; கல்யாணசுந்தரம் என்பவருக்கு இன்னெரு விதத்தில் பொறுமை. என்ன சம்பளம் கொடுத்தாலும் அவர் கடைக்கு ஒரு நல்ல பையன் கிடைக்கவில்லை. குருக்களுக்கு வேம்பையன் மாதிரி ஒரு பையன் ஒரு செலவும் இல்லாமல் கிடைத்திருக்கிறனே என்ற ஆத்திரம்.

''என்டா வேம்பையா? ஆயுசுக்கும் எடுபிடி வேலைதான் செய்துக்கிட்டிருக்கப் போறியா? எங்கே போனலும் உனக்குக் கண்ணை மூடிக்கிட்டுப் பதினஞ்சு ரூபா கொடுப்பானே சம்பளம்! நீ அதைப் பத்திக் கவலைப்பட்டுக்கிறதே இல்லையா?'' என்று வேம்பையனைப் பார்க்கிற போதெல்லாம் கரைத்துக் கொண்டே இருந்தார்.

''ஏன்டா, சொல்றேன்னு நினைச்சாலும் நினைச்கட்டுப் போ! குருக்களையா தம் மகனுக்கு அதை இதைச் சொல்லிக் குடுத்து, ஒரு பிழைப்புக்கு வழி செய்திட்டாருல்ல? அடுத்தாப்பலே உனக்கு என்ன செய்திருக்காரு சொல்லு பாப்பம்!''

''எனக்குப் படிப்பு வரல்லியே அதுக்கு அவரு என்ன செய்வாரு?''



''புடவை சாயம் போகுமா?''
''போகாது.''
''கிழியுமா?''
''கிழியாது.''
''என் மாமியாருக்கு ஏற்ற புடவை உன் கடையில் இல்லே, வேண்டாம் போ!''

''எங்கே உன்னை என் கடைக்கு வேலைக்கு அனுப்பச் சொல்லு பாத்துப்புடலாம், பதினஞ்சு ரூபா நான் தரேன். அனுப்ப மாட்டாரு. அப்புறம் வேப்பந் தழையை யார் ஒடிச்சுக்கிட்டு வருவாங்க அவருக்கு?'' என்று முடுக்கி விட்டார்.

அதன் பலன் வேம்பையன் மூன்று நாட்களாக வீட்டுக்கு வராமல் எங்கோ போய் விட்டான். தினம் கல்யாணசுந்தரத்தின் செலவில் இரவுக் காட்சிகளுக்கு அவன் போய்க் கொண்டிருந்தான். நாலாம் நாள் காலையில் அவன் அவருடைய கடையில் வேலைக்குப் போவதற்காகத்தான் புறப்பட்டான், ஆனல் வழியில் கருப்புக் குருக்கள் திருக்குளத்தில் கட்டையாக மிதக்கிருர் என்று கேள்விப்பட்டு அவன் அழுது கொண்டே வீட்டுக்குத் திரும்ப ஓடிவந்து விட்டான்.

அன்று மதியத்தில் வீடு திரும்பிய குருக்கள் அவனைப் பார்த்து, ''அடே வேம்பு, அந்த விபூதி மடலைக் கொண்டு வாடா!'' என்று மட்டும்தான் சொன்னர். வீட்டை விட்டுப் போனதைப் பற்றிப் பேச்சே வரவில்லை.

அப்புறம்தான் அவனுக்காக என்று டயர் போட்ட வண்டியும் மாடும் அவர் வாங்கிக் கொடுத்தார். அவன் வெகு உற்சாகமாகச் சத்தத்துக்கு வண்டி ஓட்டினன். அன்றாடம் ஐந்து, ஆறு என்று மிச்சம் வந்தது. ஒரு வாரம் ஓட்டிய பிறகு வந்த பணத்தை அவன் குருக்களிடம் கொடுக்க வந்தான்.

''என்கிட்டே ஏன் கொண்டு வரே? தபாலாபீஸிலே உன் பேரிலே போட்டு வச்சுக்கோ!' என்ருர் அவர்.

ஏழெட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. வேம்பையனிடம் கணிசமான பணம் சேர்ந்திருக்கும் என்று எண்ணி அவர் பெருமைப் பட்டுக் கொண்டார். அன்றைக்கு வேம்பு வண்டியைக் கட்டவில்லை. ஓய்வு எடுத்துக் கொண்டு எங்கேயோ தூங்கிக் கொண்டிருப்பான் என்று நினைத்துக் கொண்டார். மங்கலான அந்தி வெளிச்சத்தில் தாயும் மகளும் போல இரண்டு பேர் வாசற் குறட்டில் வந்து தயங்கி நின்ருர்கள்.

''யாரம்மா அது?''

''கும்பிடறேனுங்க! நான் வந்து தையல் நாயகியோட மூத்த மகங்க, எம் பேரு

லோகு. இது வந்து என் மக — இதுக்கு எங்க ஆத்தா பேரையேதான் வச்சிருக்கோம்!''

கறுப்புக் குருக்களுக்குக் கப்பென்று தொண்டையை அடைப்பது போலிருந்தது. விளக்குச் சுவிட்சைப் போட்டுவிட்டு, வந்தவனுடைய முகத்தைப் பார்த்தார். தூக்கி வாரிப் போட்டது. சரியான கறுப்பு. அதாவது கிட்டத்தட்ட அவர் நிறம். அவருக்குப் பேச்சே ஓடவில்லை. மனம் என்னவோ கணக்குப் போட்டுப் பார்த்தது. அவருடைய பையனை விட இவனுக்குப் பத்து வயது கூடுதலாக இருக்கும். அதாவது முப்பத்தாறு.... அவனுடைய பெண் நல்ல நிறமாக இருந்தாள்; தையல்நாயகி நிறம்.

''நீ மெட்ராஸிலேதானே இருக்கே?''

''அம்மா செத்ததுக்குப் பிறகு இங்கேயே வந்துட்டோம். பிளே-பாக் பாடி வேணது சம்பாதிச்சேன். எல்லாம் எப்படியோ போயிடுச்சு. இதுக்கு அவ்வளவாப் பாட வராது. கட்டிக் கொடுத்துடலாம்னு...''

''சரி. இப்ப நான் என்ன செய்யணும்?''

''இதோட வேலையாத்தான் உங்களைப் பார்த்துட்டுப் போகலாம்னு .... இதுக்கு வயத்திலே கட்டி மாதிரி இருக்கு... அதான் என்னன்னு கேட்டுட்டுப் போகலாம்னு...''

''இப்படி வாம்மா! எங்கே இடது கையை நீட்டு.....''

கறுப்புக் குருக்கள் நாடியைப் பார்த்து விட்டுத் தாயையும் மகளையும் மாறி மாறிப் பார்த்தார்.

''கட்டியாத் தெரியல்லியே. கர்ப்ப நாடின்னு பேசறது!''

''அப்ப இதுக்கு நீங்கதான் ஒரு வழி செய்யணும். உங்களாலே முடிஞ்சாத்தான் உண்டு....

''நான் வழி செய்யறதாவது? சிவ சிவா! எனக்கு அந்த வைத்தியமெல்லாம் தெரியாதம்மா.... மகா பாவம்!''

''நான் அந்த வழியைச் சொல்லலீங்க ஐயா. உங்க வளர்ப்புப் பிள்ளையைத்தான் வழிக்குக் கொண்டு வரச் சொல்றேன்.



உங்க வளப்பாச்சே, போகட்டும்னு இருந்தேன். வார்த்தை பிசகாமெ நடந்துக்கும்னு நினைச்சேன். கடையிலே பாத்தா கதையே மாறிப் போயிடுருப்பலே இல்லே சேதி காதிலே விளுது...''

கறுப்புக் குருக்களுக்குச் சொரக்கென்று இருந்தது. வேம்பையன் வண்டி கட்டாமல் போனதற்கு இப்போதுதான் அவருக்குக் காரணம் புரிந்தது.

''சரி போ, நான் இதை விசாரிக்க என்ன செய்யணுமோ செய்யறேன்!'' என்று அவர்களை அனுப்பி வைத்தார்.

விசாரித்துப் பார்க்கலாம் என்றால் வேம்பையன் வந்தால்தானே? சந்தேகம் வந்து தபாலாபீஸ் புத்தகத்தைத் தேடினார்; கிடைக்கவில்லை. விசாரித்ததில் எல்லாப் பணத்தையும் அவன் முதல் நாளே கணக்கிலிருந்து எடுத்து விட்டதாகத் தெரிந்தது. ஒரு பெண்ணை நம்ப வைத்துக் கெடுப்பதாவது? வளர்த்து ஆளாக்கினவனைக் கூட மதிக்காமல் மனம் போனபடி போவதாவது?

மறுநாளும் பார்த்து விட்டார். ஒரு தகவலும் தெரியவில்லை. அதே மாதிரி நிலையில் இந்த வீண் கவலைகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள அவருக்கு ஒரு வழிதான் தெரியும். அது மாயா ஜாலம் ஒன்றுமில்லை. அவர் சம்பந்தப்பட்ட வரையில் அது ஒரு யோகம். ஆனால் இப்போது அவருக்கு உடல் தளர்ந்து விட்டது. முன் மாதிரி தாக்குப் பிடிக்க முடியாது போலிருந்தது. போனால் நல்லதாயிற்று; ஆண்டவன் விட்ட வழி என்று திருக்குளத்தில் விடியற்காலையில் போய் இறங்கி விட்டார்.

குருக்கள் எப்போது கரையேறுவார் என்று மாலை வெளிச்சம் மறையும் வரையில் கூட்டம் காத்திருந்து பார்த்து விட்டு, அந்த அறிகுறி ஏதும் காணாமல் கரைந்து மறைந்தது.

மறு நாள் காலையில் தொண்டி மணி கத்தினான். கறுப்புக் குருக்களின் உடல் கரையோரமாக ஒதுங்கிக் கிடந்தது. சற்றைக்கெல்லாம் கூட்டம் கூடிவிட்டது. யாரோ ஓடிப்போய் ஒரு டாக்டரையே அழைத்து வந்து விட்டார்.

அவர் கால் மணி நேரம் போல் கண், மூக்கு, மார்பு என்று சோதித்துப் பார்த்தார். பிறகு ஸ்டெதாஸ்கோப்பைக் கையில் உருவிக்கொண்டபடி உதட்டைப் பிதுக்கி விட்டார். ''ஊஹும்.... போயிட்டுது. போலீசுக்குச் சொல்லிடுங்க!''

''இல்லீங்க டாக்டர்! போயிருக்காதுங்க. ப்ளீஸ், இன்னொரு வாட்டி நல்லாப் பாத்துடுங்க.... பீஸைப் பத்திக் கவலையில்லே!'' என்று டாக்டரை அழைத்து வந்தவன் அழாக் குறையாக முறையிட்டான்.

''திரும்பத் திரும்ப என்ன பாக்......'' என்று டாக்டர் முடிப்பதற்குள், — தூங்கி விழித்த மாதிரி,—

''வந்துட்டியா வேம்பையா! ஓடிப்போய் விபூதி மடலை எடுத்துண்டு வா!'' என்று எழுந்து உட்கார்ந்தார் கறுப்புக் குருக்கள்

# யுகங்கள் மாறும் போது...



வாஸந்தி

8

ஒரு விநாடி அவன் என்ன பேசுகிறான் என்று புரியாமல் அவள் திகைத்தாள். இவன் இத்தனை கீழ்த்தரமாகப் பேசக் கூடியவன் என்று நம்ப முடியாதவள் மாதிரி... காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவன் இத்தனை குரூரமாகப் பேசக் கூடியவன் என்று நம்ப முடியாதவள் மாதிரி....

அதுவும் இவன் யாரை உதாரணம் காட்டி அப்படிப் பேசினான்? எத்தனை அநியாயமான அசிங்கமான வார்த்தைகள் பேசினான்? அவன் பேசிய வார்த்தைகள் அவளை எந்த மாதிரி பாதிக்கும் என்று இவன் உணர்வானா? அந்த மாதிரி மெல்லிய உணர்வுகள் இவனுக்குக் கிடையாது என்று உணர்கையில் அவளுக்குக் கோபத்திலும் துக்கத்திலும் அவமானத்திலும் உடம்பு நடுங்கிற்று. சீ! இந்த மாதிரி மனுஷனுடன் யாராவது பேசுவார்களா என்றிருந்தது. இவனுடன் பேசிக் கொண்டிருந்தால் எனக்குத்தான் அவமானம், எனக்குத்தான் சிறுமை என்று தோன்றிற்று. மனத்திலிருந்த கனவுகள் எல்லாம் திடீரென்று வற்றிப்போய் ஒரு வெறுமை படர்ந்த மாதிரி இருந்தது. இதுவரை உணர்ந்தறியாத ஒரு வெறுப்புடன் அவள் அவனைப் பார்த்தாள்.

''நான் உன்னோடே பேசத் தயாராயில்லே. உனக்குப் பார்வையும் சரியா யில்லே மூளையும் சரியா யில்லே!''

''ஓ ஷட் அப்!''

அவன் உள்ளே சென்றான். கண்களில் நீர் நிறைந்திருந்தது. சொல்லிய வார்த்தைகளுக்காக இவன் வருத்தப்பட மாட்டான் என்று நினைத்துக் கொண்டாள். ஏனென்றால் இவனே அந்த வார்த்தைகளை நம்புகிறான். அதைச் சொல்லி அவளைத் துன்புறுத்துவது தனது புருஷ லட்சணம் என்று நினைக்கிறான். இவன் ஆண் என்பதால் நான் எதை வேணுமானாலும் விழுங்கிக் கொண்டு விடுவேனா? அபாண்டமாகப் பேசினால் விடுவேனா! ஒரு பக்கம் துக்கம் குமுறிக் கொண்டு வந்தது. மறு பக்கம் ஆத்திரம் கட்டுக்கடங்காமல் போயிற்று. சீச்சீ! நீ ஒரு மனுஷனா?

அவள் சாப்பாட்டு மேஜையின் மேல் இருந்த தன்னுடைய ஓவியத்தையும் மற்றச் சாதனங்களையும் அப்புறப்படுத்தினாள்.

அவள் எடுத்து வைக்கையிலேயே அவன் அடிக் குரலில் ஆத்திரத்துடன் சொன்னான்.

''இது ஒண்ணு தரித்திரம்; பெரிய ஆர்டிஸ்ட்டுனு சொல்லிண்டு கண்டவனை யெல்லாம் உள்ளே விடறது!''

சீ! உன்னைக் கண்டா நான் ஆசைப்பட்டேன்! உன்னையா கல்யாணம் பண்ணிக்கணும்னு துடிச்சேன்? இவன் யாரோ ஓர் அந்நியன் என்று தோன்றிற்று. முன் பின் தெரியாதவன் என்று தோன்றிற்று.

கண்களில் நீர் பொங்கிக் கொண்டு வந்தது. அவள் சட்டென்று அதை உள்ளுக்குள் இழுத்துக்கொண்டாள். இவனிடம் நான் தோற்றுப்போனேன் என்று காண்பிக்கக் கூடாது... பல ஹீனமாகிப் போனேன் என்று காண்பிக்கக் கூடாது. மனத்தில் கோபத்தில் நூறாயிரம் கேள்விகள் வெடித்தன. அஞ்சு மணிக்கே ஆபீசை விட்டுக் கிளம்புகிறவன் நீ எங்கே போறே தினமும்? எவளோடு சுத்தறே? உன்னைக் கேள்வி கேட்க யாருமில்லையா? அது எந்த தர்மத்தில் சேர்ந்தது?

ஏனென்றால் நீ ஆண்.

அவள் சிலிர்த்துக் கொண்டாள். ஆணுக்கென்று தனி தர்மங்களா? நியாயங்களா?

கண்ணீரும் ஆத்திரமும் கண்களில் அனல் முனைகளாய்க் குத்தின. என்ன வார்த்தைகள் சொன்னாய் என்று திருப்பித்திருப்பிக்கணத்தில் கோபம் எழுந்தது. என்னைத்தான் அபாண்டமாய்ச் சொன்னாய். கணவன் என்கிற உரிமையில். என் அம்மாவை ஏன் இழுக்கிறாய் நடுவில்? என் அம்மாவைப் பற்றி என்ன தெரியும் உனக்கு? தபஸ்வினி மாதிரி இருக்கும் என் அம்மாவைப் பற்றி என்ன தெரியும் உனக்கு? இந்த மாதிரி அவன் இன்று பேச வேண்டுமானால் அவன் மனசில் இந்த எண்ணமும் நினைப்பும் வெகு நாட்களாக இருக்க வேண்டும் என்று தோன்றிற்று.

அவன் சாப்பிடுகையில் தன் கோபம் இன்னும் தணியவில்லை என்று காண்பிக்கிற மாதிரி கரண்டிகளையும் தட்டுக்களையும் ஓசைப்படுத்திக் கொண்டிருந்தான்.

நன்றாகக் கோபப்படட்டும் என்று அவள் ஆத்திரத்துடன் நினைத்துக் கொண்டாள். இவன் கோபப்படப் படத்தான் இவனுடைய சுயரூபம் நமக்குத் தெரியும். இன்றைக்குத் தெரிந்து விட்டது – ஒரு வார்த்தையில்– ஒரு பார்வையில் – எப்படிப்பட்ட வார்த்தை அது! அவளுக்கு இவனைப் பற்றி இருந்த கொஞ்சநஞ்ச நம்பிக்கையையும் பஸ்மமாக்கிய வார்த்தை! எட்டு மாதங்களுக்கு முன்பு இவனைப் பார்க்கையில் நினைக்கையில் எப்படி மனசு பரவசப்பட்டுப் போகும்? அந்தப் பரவசம் இவனோடு இருக்கும் போதெல்லாம் சாசுவதமாக இருக்கக் கூடிய ஒரு நிலை என்று எப்படி எண்ணினேன்? அப்பொழுது அவனைப் பற்றி மனத்தில் பதிந்து போயிருந்த உயர்ந்த எண்ணங்கள் பிறகு எவ்வளவு சீக்கிரம் அற்று மணலாய்ச் சரிந்து போயின?

அவன் சாப்பாட்டை முடித்துக்கொண்டு வராந்தாவின் கைப் பிடியைப் பிடித்தபடி

சிகரெட் பிடித்துக் கொண்டு நிற்பது தெரிந்தது. அவள் ஓர் அலுப்புடன் எழுந்தாள். சாப்பிடப் பிடிக்கவில்லை. எல்லாவற்றையும் எடுத்து மூடி ஃப்ரிஜில் வைத்து மேஜையைச் சுத்தப்படுத்திவிட்டு வந்து படுத்துக் கொண்டாள்.

அவன் எப்பொழுது வந்து படுத்துக்கொண்டான் என்பதை அவள் கவனிக்கவில்லை. இருவருக்கும் இடையே ஓரடி இடைவெளி இருந்தாலும் அவனிடமிருந்து தான் வெகு தூரம் விலகி வந்து விட்ட மாதிரி இருந்தது.

அன்று இரவும் அரைகுறையான தூக்கத்தில் அப்பாவின் அந்தக் கூக்குரல் கேட்டது. ''யூ டர்ட்டி வுமன்! யூ வோர்!'' அவள் சடாரென்று விழித்துக் கொண்டு உட்கார்ந்தாள். மார்பு படபடக்கையில் கண்களில் நீர் நிறைந்தது. இந்தக் குரல் இனிமேல் தன்னை நிரந்தரமாக வதைக்குமோ என்று ஒரு திகில் ஏற்பட்டது. திடீரென்று ஓர் உணர்வு அவளைத் தாக்கிற்று. அம்மாவின் நிலையே தனக்கும் ஏற்பட்டிருப்பது புரிந்தது. இது எப்படிப்பட்ட, நினைத்துப் பார்க்காத ஓர் இக்கட்டான ஒற்றுமை என்று நினைக்கையில் மனசில் ஒரு நம்ப முடியாத ஆயாஸம் ஏற்பட்டது. இந்த நிலைமையை அம்மா மாதிரி தன்னால் நிச்சயம் தாங்கிக் கொள்ள முடியாது. வாயை மூடிக் கொண்டு, தன் மானத்துக்கு விழும் அடிகளையும் சிறுமைகளையும் தாங்கிக்கொண்டு எனக்குச் சரணையே இல்லை என்கிற மாதிரி நீ என்ன சொன்னாலும் எனக்குப் போக்கிடமே இல்லாததால் உன் காலடியிலேயே கிடப்பேன் என்கிற மாதிரி — இந்த மாதிரி ரோசம் கெட்டு தான் நிச்சயம் இருக்க மாட்டேன் என்று தனிலி நினைத்துக் கொண்டாள். தான் இனிமேல் செய்ய வேண்டியது என்ன என்று அவள் இரவு முழுவதும் சிந்தித்தாள். இந்த மனிதனுடன் இனிமேல் பேசியோ விவாதித்தோ சண்டை போட்டோ ஏதும் லாபமில்லை என்று நினைத்துக் கொண்டாள். இந்த மாதிரி குறுகிய பார்வையும் எண்ணங்களும் கொண்டவனுக்கு அவளுடைய வாதத்தினால் ஏதும் ஞானோதயம் ஏற்பட்டுவிடப் போவதில்லை. இப்பொழுது தாற்காலிகமாக அவன் சமாதானமானாலும் சொல்லிவிட்ட வார்த்தைக்காக மன்னிப்புக் கேட்டாலும் அவனுடைய பார்வைகள் மாறப் போவதில்லை. அவன் மட்டமானவன் என்று மனசு புரிந்து கொண்டு விட்ட பிறகு அவளுக்குப் பழைய அபிமானம் அவனிடம் ஏற்படப் போவதில்லை. அப்படி ஓர் அபிமானமில்லாத மனசோடு இவன் மட்டமானவன், பண்பில்லாதவன் என்கிற நினைப்பு ஒவ்வொரு விநாடியும் அவளை ஞாபகப்படுத்திக்கொண்டிருக்கும்போது அவர்களிடையே இருக்கப் போகும் உறவு எப்படிப்பட்டதாக





இருக்கும்? வலுவில்லாத உறவாகச் சாண் ஏறினால் முழம் சறுக்கும் கதையாக இருக்கும். உனக்கு ஒரு நியதி, எனக்குத் தனி நியதி என்று காலமெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கப் போகும் இவனிடம் தன் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ள முயற்சி செய்யாமல் அவளால் இருக்க முடியாது. அந்த நிலையில் தினமும் ஒரு தர்க்கமும் வாக்கு வாதமும் கசப்பான வார்த்தைகளும் சங்கிலித் தொடர்களாக நீளப் போகிறது. நானா வட்டத்தில் மனசின் பண்பை அவளே மறந்து போவாள். நாகரிகத்தையே இழந்து விடுவாள். ஓ... எத்தனை பெரிய வீழ்ச்சியாக இருக்கும் அது! பலவீனமான தருணங்களில் அவன் சிரிப்பைப் பார்த்து அவனது உருவத்தைப் பார்த்து, இந்த உடம்பு வெட்கமற்றுக் கூடப் போகும். அந்த மாதிரி ஒரு தருணத்தின் விளைவாக அவனது வித்தை அவள் ஏற்க நேருமானால்....?

அவளுக்கு மாலாவின் குழந்தையின் ஞாபகம் வந்தது — அதன் ரோஜாக் கன்னங்களும் மோகனச் சிரிப்பும் ஞாபகத்துக்கு வந்தது. கண்களில் நீர் நிறைந்தது. நேற்று மனத்தில் முளைத்த ஆசை எத்தனை அற்பாயுசான ஆசை என்று தோன்றிற்று. ஒரு குழந்தை அவளுக்குப் பிறந்தால் அது எப்படி இருக்கும்? அவனுடைய பிம்பமாய் — அவனுடைய எண்ணங்களின் பிரதிபலிப்பாய், சின்னத்தனமாய், அவனை மாதிரி சிரித்து அவனை மாதிரி ஏமாற்றி, அவனை மாதிரி ஆணவத்தோடு— ஓ. ஹெல் நோ—!

காலையில் நளினி வழக்கம்போல் எழுந்து காப்பி போட்டாள். அவனுக்குக் கொஞ்சம் உப்புமாவைச் செய்து மேஜையின் மேல் வைத்தாள். அவன் குளித்து டிரஸ் செய்து கொண்டு உப்புமாவைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வெளியில் கிளம்பிப் போனான்.

அவளுக்குத் திடீரென்று சிரிக்க வேண்டும் போல் இருந்தது. உன்னுடைய எந்த விதமான செய்கையும் இனிமேல் என்னைப் பாதிக்காது என்று சொல்ல வேண்டும்போல் இருந்தது. உன்னிடம் நான் எதையும் யாசிக்கப் போவதில்லை. உன் தயவில்லாவிட்டால் நான் நடுத் தெருவில் நிற்பேன் என்கிற பயம் எனக்கு இல்லை. யாருடைய தயவும் இல்லாமல் தன் மானத்தை இழக்காமல் சுதந்திரமாக என்னால் இருக்க முடியும். படிப்பும் பட்டமும் இருக்கிறது. நல்ல வேளையாக எம்.ஏ. பரீட்சைக்குச் சிரத்தையுடன் படித்துப் பாஸ் பண்ணினேனும் என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

நேற்று இரவு ஒரு தீர்மானத்தை ஏற்படுத்திக் கொண்ட பிறகு மனசு நிர்மலமாகப் போன மாதிரி இருந்தது. இந்த ஒன்பது மாத வாழ்வு எனக்கு ஓர் அனுபவம் என்று தோன்றிற்று.

நேற்று இரவு சாப்பிடாததால் அவளுக்குப் பசித்தது. அவனுக்காகச் செய்து வைத்த உப்புமாவைச் சாப்பிட்டு விட்டு ஸூட்கேஸில் தன்னுடைய புடவைகள், நகைகள் எல்லாவற்றையும் எடுத்து வைத்துக்கொண்டாள். ஒரு காகிதத்தில் "உன்னோடு வாழ்வது எனக்கு இனிமேல் அசாத்தியமான காரியம், நான் போகிறேன்" என்று எழுதி மேஜையின் மேல் அவன் பார்வையில் படும்படியாக வைத்து விட்டு அவள் கிளம்பினாள்.

டாக்ஸியில் உட்கார்ந்ததும்தான் மனசில் ஒரு சோகம் அழுத்திற்று. அம்மாவுக்கு அவள் திரும்பி வருவது எத்தகைய அதிர்ச்சியாக இருக்கும் என்று நினைக்கையில் அம்மாவுக்காகக் கண்களில் நீர் நிறைந்தது. பொறுமையும் பண்பும் உள்ள அம்மா — தபஸ்வினி மாதிரி இருக்கும் அம்மா. ஓ அவளைப் பற்றி அவன் என்ன வார்த்தை சொன்னான்? மம்மி ஐ ஆம் ஸாரி. ஐ காண்ட் ஹெல்ப் இட். எனக்கு ரோசம் ஜாஸ்தி. நான் உன் வயிற்றைக் கீறித்தான் பிறந்தேன் — no, நான் உன் யுகத்தைச் சேர்ந்தவள் இல்லே மம்மி...

அம்மா இதைப் பற்றி என்ன சொல்லப் போகிறாள்? (அடுத்த இதழில் முடியும்)

# பாரத பாக்ய விதாதா

ஆகஸ்ட் 15, 1947 அன்று இந்திய மக்கள் தங்கள் எதிர்காலம் எப்படி இருக்க வேண்டும் என்று தீர்மானித்தனர்.
இந்திய சுதந்திரத்தின் 32வது ஆண்டுவிழா இன்று கொண்டாடப்படுகிறது. இத்தருணத்தில்

★ **நமது சாதனைகளை நினைவுபடுத்தி ஆக்கமும் ஊக்கமும் பெறுவோம்**

★ **ஒளிமயமான எதிர்காலத்துக்காக புத்துணர்வுடன் பாடுபடுவோம்.**

## 32 வருட சுதந்திர வாழ்வில்...

★ நாட்டின் ஒற்றுமையை நிலைநிறுத்தி அன்னிய ஆக்கிரமிப்புகளை முறியடித்திருக்கிறோம்.

★ மக்களின் ஆயுள் காலம் சராசரியாக 32லிருந்து 52 வருடமாக உயர்த்தியுள்ளோம்.

★ உணவு உற்பத்தியை இரட்டிப்பாக்கி இருக்கிறோம்.

★ தொழில் துறை உற்பத்தியை நான்கு மடங்குக்குமேல் அதிகரித்திருக்கிறோம்.

★ அன்னியச் செலாவணி கையிருப்பை ரூ. 5,000 கோடிக்கு மேலாக இருக்கச் செய்துள்ளோம்.

நடப்பு ஐந்தாண்டுத் திட்டத்தின் நகலில் கண்டுள்ளபடி,
"நமது நாட்டின் சாதனை குறித்து நாம் பெருமைப்படலாம்...
அன்னிய நாடுகளின் உதவியை நாடியிருந்த இந்த நாட்டின்
தொடிந்து போன பொருளாதாரம் இன்று நவீன
மயமாக்கப் பட்டு சொந்த பலத்தில் நிற்கிறது."

**நாட்டின் சாதனை குறித்து பெருமை கொள்ளுவோம்**
**சுதந்திரத்தை காத்து முன்னேற்ற வாழ்வு பெற**
**ஒன்றுபட்டு பாடுபடுவோம்.**

davp 79/140




✖ நடிப்பு: குமாரி கோமதி
திருமதி செண்பகம்

வெறுப்பு... வெறுப்பு..., அப்படியொரு வெறுப்பு.

பார்வதத்துக்குத் தன் மூத்த மருமகள் சாந்தாவைப் பார்க்கும்போதெல்லாம் மனத்தின் மூலையில் மண்டிக் கிடக்கும் அந்த வெறுப்பு விசுவரூபம் எடுத்து அவள் மேல் பாயும்.

மூத்த மகன் பாலகிருஷ்ணனுக்குத் தனக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்த ராமசாமி வாத்தியார் மேல் அளவுக்கு அதிகமாய் இருந்த பக்தி, அவருடைய கஷ்டத்தையும், பாரத்தையும் தீர்க்கும் வகையில் அவருடைய நான்கு பெண்களில் மூத்தவளான சாந்தாவைக் கல்யாணம் செய்து கொள்வதில் போய் முடிந்தது. சாந்தா நல்ல கறுப்பு. சாதாரண கறுப்பு அல்ல. உள்ளங்கையிலே கரித்துண்டை வைச்சாலும் கரித்துண்டை வெளுப்பாக்கிக் காட்டுகிற நிறம். முகமும் அவ்வளவு லட்சணமில்லே.

பாலகிருஷ்ணன் விஷயத்தைச் சொன்னபோது பார்வதம் பாம்பாய்ச் சீறினாள்.

கல்யாணம் முடிந்து ஓரிரண்டு நாள் வரையிலும் தன் வெறுப்பை நெஞ்சில் தேக்கிக் கொண்டிருந்த பார்வதத்தால் மூன்றும் நாள் தேக்கிக் கொள்ள முடியாமல் கொட்டத்

> சிறுகதை வாழ்க்கையின் சாரம்.
>
> - புதுமைப்பித்தன்

தொடங்கினாள். சாந்தா எதைச் செய்தாலும் அதில் ஒரு குற்றத்தை உருவாக்கி, அதைப் பூதாகாரப்படுத்தி — விஷம் தோய்ந்த வார்த்தைகளால் அவளுடைய இதயத்தைப் புண்ணாக்குவது வாடிக்கையானது. அதிகாலையில் தண்ணீர் பிடித்து, பாத்திரம் கழுவி, காப்பி போட்டு மாமியாருக்குக் கொடுப்பதில் ஆரம்பித்து வீட்டு வேலைகள் அத்தனையையும் சாந்தாதான் செய்ய வேண்டும்; அவள் கணவனே குறிப்பிட்டான்: ''ஸ்விட்சுப் போட்டா ஓடும் மிக்ஸி மாதிரி நீ; அதாவது கரண்ட் ஃபெய்லியர் ஆனா ஓஞ்சு நிற்கும். உனக்கு அந்த ஓய்வு கூடக் கிடையாது!'' உழைப்பதற்குச் சாந்தா அஞ்சவில்லை. ஆனால் பார்வதம்மாளின் சுடு சொற்கள்...பார்வதத்திடமிருந்து சண்டமாருதமாய்ப் புறப்பட்ட அந்த விஷ அம்புகளினால் முதலில் சில நாட்கள் தளர்வுற்ற சாந்தா பின் நிமிர்ந்து கொண்டாள். தன் புன்னகையின் மூலம் அந்த அம்புகளின் கூர் முனைகளை மழுங்கச் செய்வதில் வெற்றி பெற்றாள். பார்வதம் வெறுப்பை உமிழ்ந்தால் சாந்தா சிரிப்பைப் பதிலுக்குக் கொட்டினாள்.

வெர்டினரி டாக்டர் படிப்பை முடித்துத் தெக்குப் பாளையத்தில் கோழி விஸ்தரிப்பு பண்ணையில் பணியாற்றும் சின்ன மகன் தயாளனுக்குத் தங்க விக்கிரகமாய் ஒரு மனைவியைக் கொண்டு வந்ததில் ரொம்பவும் பூரித்துப் போனாள் பார்வதம்.

அதுவும் வரதட்சணை இருபதாயிரம்.... ஐம்பது பவுன் நகை. வெள்ளிப் பாத்திரங்கள் ஃபோம் கட்டில்கள், ஃபிரிட்ஜ், ஸ்கூட்டர் என்று பட்டியல் அடுக்கிய பார்வதத்தின் மனத்தைக் குளிரச் செய்த குடும்பம் அல்லவா லாவண்யாவின் குடும்பம்....

பார்வதம் லாவண்யாவைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடாத குறைதான்.

சாந்தாவை அடுப்பில் கொதிக்கும் எண்ணெய் வாணலியில் போட்டு வதக்காத குறைதான்.

அன்றைக்குக் காலை. புறக்கடையில் துணி துவைக்கும் கல்லின் அருகே உட்கார்ந்தபடி இரு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு ஓங்காரித்து வாந்தியெடுத்துக் கொண்டிருந்த சாந்தாவை நெருங்கினாள் பார்வதம்.

''என்னத்தைத் தின்னுவெச்செ? மத்தவங்களுக்கு வயித்தைப் புரட்டறமாதிரி வாந்தி எடுக்கிறே?''

வாந்தி எடுத்த களைப்பில் கண்களில் நீர் தளும்பப் புன்னகைத்தாள் சாந்தா. ''உங்க பேரனோ, பேத்தியோ தெரியல்ல அத்தே... வயித்தை ஏகமா புரட்டறாங்க...''

''சரி...சரி... நீ ஒருத்திதான் அதிசயமா உண்டாயிருக்கிறமாதிரி சோர்ந்து சோர்ந்து படுத்துக்காதே. ஓடியாடி வேலை செஞ்சாத்தான் பிரசவம் நல்லபடியா ஆகும். லாவண்யாவினால் எல்லா வேலையும் செய்ய முடியாது. நீ மொதல்ல குளிச்சுட்டுச் சமையல் பக்கமா பார்த்துக்க.''

''சரி அத்தை.'' தலையைச் சுற்றிக் கொண்டு வந்தாலும் சமாளித்தபடி எழுந்தாள் சாந்தா. கசந்த வாயைக் கொப்பளித்து, சேலைத் தலைப்பால் வாயைப் பொத்தியபடி குளியலறையை நோக்கி நடந்தாள்.

சாந்தா உண்டான நாளிலிருந்து பார்வதம் ஒவ்வொரு மாதமும் சின்ன மருமகள் லாவண்யாவை உன்னிப்பாய்க் கவனிக்கத் துவங்கினாள்.

லாவண்யாவோ பார்வதத்தின் பரிதவிப்பு புரியாதவளாய் ஒவ்வொரு மாதமும் அதே நாளில் சொல்லி வைத்தாற்போல் குளித்துக் கொண்டிருந்தாள்.

பார்வதம் ஆசையாய் அடுத்த மாதத் தேதிக்காகக் காத்திருப்பாள். லாவண்யா மாதம் தவறாமல் குளிக்க, குளிக்க சாந்தா தாய்மைப் பூரிப்பில் நாளுக்கு நாள் ஜொலிக்கத் துவங்கினாள். அவளுடைய அடர்த்தியான கறுப்பு நிறம்கூட கொஞ்சமாய் வெளிறி சாம்பல் வண்ணத்தை அடைய முயன்று கொண்டிருந்தது. வயிற்றில் கருவைச் சுமந்தபடி பெருமூச்சுடன் வீட்டு வேலைகளைச் செய்யும் பொழுது பார்வதம் கண்டும் காணாதது போல் உட்கார்ந்து கொள்வாள்.

சாந்தாவுக்கு அது ஏழாவது மாசம்.

ஊரிலிருந்து சாந்தாவின் அப்பாவும் அம்மாவும் முகங்களில் பொங்கும் ஏகப்பட்ட பரவசங்களோடு அதிரசமும், முறுக்கும் நிரம்பிய தூக்குகளோடு சாந்தாவை அழைத்துப் போக வந்து சேர்ந்தனர். வந்து சேர்ந்து அரை மணி நேரத்துக்குள் சாந்தாவின் அப்பா அவளைக் கடைவீதிக்கு அழைத்தார். வெகு உற்சாகத்தோடு தன் பெற்றோர்களுடன் கடை வீதிக்குப் புறப்பட்டாள்.

சாந்தா புறப்பட்டுப் போனபிறகு பார்வதம் கோவிலுக்குப் போனாள்.

கோவிலுக்குப் போய்விட்டுப் பார்வதம் வீடு திரும்பிய போது இருட்டத் தொடங்கி விட்டது. முழங்கால்கள் ஏனோ 'விண்விண்' என்று வலித்தது. மூட்டுக்களைத் தடவி விட்டுக் கொண்டே வாசற்படி ஏறி உள்ளே நுழையப்போன பார்வதம், லாவண்யாவின் சற்றே காரமான குரலைக் கேட்டு அப்படியே நின்றாள்.

''மூன்று நாளாக ஒரே கட்சியில் இருக்கிறீர்களே! வெட்கமாயில்லே?''





முயலின் கண்கள் வெளியில் பிதுங்கியிருப்பதால் பின்னால் நடப்பதையும் அறிந்து கொள்ளும்.



ஆந்தையின் பார்வை மனிதனைக் காட்டிலும் பத்து மடங்கு கூர்மையானது. ஆதலால் அது எந்த இருட்டிலும் மிக வேகமாகப் பறக்கும்.

—அ. இ.



லாவண்யா தன் கணவனிடம் பொருமிக் கொண்டிருந்தாள்.

''நீங்க என்ன சொன்னாலும் சரி. என்னாலே இங்கே இருக்க முடியாது. உங்க அண்ணியை ஊருக்குக் கூட்டிட்டு போக அவங்க அம்மாவும், அப்பாவும் வந்துட்டாங்க. நாளைக்குச் சாயந்தரம் அவங்க கிளம்பிப் போயிடுவாங்க. உங்க அண்ணி போன பின்னாடி இந்த வீட்டு வேலை முழுதும் யார் தலைமேலே விழும்ன்னு நினைக்கிறீங்க? நிச்சயமா என்னோட தலை மேலதான்... உங்கம்மாவுக்கென்ன, மகாராணியாட்டம் ஆறு மணிக்கு எழுந்திரிச்சா ஊஞ்சல்ல உட்கார்ந்துக்க வேண்டியது. நல்ல டிகிரி காப்பியை ஆவி பறக்கக் குடிக்க வேண்டியது. குளிச்சிட்டு வந்தவுடனே சுடச்சுடச் சாம்பாரையும் இட்லியையும் கொட்டிக்க வேண்டியது... என்னால முடியாதம்மா. இந்த வீட்டு வேலையை ரெண்டு நாள் செஞ்சா எனக்குக் காய்ச்சலே வந்திடும். நான் போறேன். உங்க அண்ணி குழந்தை பெத்துக்கிட்டு வந்த பின்னாடி நானும் வரேன்.''

லாவண்யாவின் கணவன் தயாளன் அசடு வழிய இளித்தான். மனைவியின் மோவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு கொஞ்சினான். ''என்ன லாவ்! அப்படிச் சொல்லிட்டே? எங்கம்மாவும் கூடமாட வேலை செய்வா. நீ போகாதே...''

லாவண்யா ஏகத்தாளமாய்ச் சிரித்தாள். ''செய்வாங்களே வேலை? உங்கம்மா அதுவும். உங்கம்மா! குடிச்ச வெச்ச காப்பி டம்ளரை உங்கம்மா கழுவி நீங்க என்னிக்காவது பார்த்ததுண்டா...? அடுத்த மாசம் பனிக்காலம் வேற ஆரம்பமாகப் போகுது. உங்கம்மாவுக்கு ஆஸ்துமா இருக்காமே? உங்கம்மா இருமினா பயங்கரமா இருமுவாங்களாமே? பக்கத்து வீட்டு சுதா சொன்னா. எனக்கு யாராச்சும் இருமினா உடம்பெல்லாம் கம்பளிப்பூச்சி ஊர்ற மாதிரி அருவருப்பா இருக்கும்.''

தயாளன் இன்னமும் அசடு தட்ட இளித்தான். ''அப்படிச் சொல்லிட்டா எப்படி? அம்மா கிட்டே இருக்கிற பதினைஞ்சு பவுன் இரட்டை வடச் சங்கிலி கம்மல்... வாங்க வேண்டாமா...? கொஞ்சம் பிரியமா இருக்கிற மாதிரி நடிச்சாத் தானே அதெல்லாம் உன்னோட கைக்கு வந்து சேரும்...''

அந்த விநாடி லாவண்யா சீறினாள். ''இதோ பாருங்க. எனக்கு அந்தச் சங்கிலியும் வேண்டாம். அதை வாங்கறதுக்காக ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குளிச்சவுடனே உங்கம்மாவோட அழுக்குப் படிஞ்ச கால்லே விழுந்து நான் கும்பிடவும் வேண்டாம். நாளைக்கு காத்தாலே ரயிலுக்கு எனக்கு டிக்கெட் எடுத்துடுங்க.''

''சரி, லாவ். டிக்கெட் வாங்கிடறேன். நாளைக்கு ஆபீசுக்கு லீவு போட்டுட்டு நானே உன்னைக் கூட்டிக்கிட்டுப் போறேன்.''

பார்வதத்துக்குக் கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. இருட்டில் தாழ்வாரச் சுவரைப் பிடித்துக் கொண்டு தானும் ஒரு மரத் தூணாய் அசைவற்று நின்றிருந்தாள்.

இப்போது லாவண்யா கணவனோடு இழைந்த குரலில் பேசிக் கொண்டிருந்தாள். ''நான் சீக்கிரமா குழந்தை பெத்துக்கணுமாம். உங்கம்மா ஆசைப்படறாங்க. சீக்கிரமா பெத்துக்க எனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? அஞ்சு வருஷத்துக்கு நாம ஜாலியா இருக்கணும்னுதான் அந்த மாத்திரைகளை விடாமே சாப்பிட்டு வர்றேன். உங்கம்மா பைத்தியக்காரத்தனமா ஒவ்வொரு மாசமும் என்னையே கவனிச்சுட்டு வர்றா. சரியான ஆளு!...''

லாவண்யாவின் ஒவ்வொரு சொல்லும் கூர் தீட்டப்பட்ட கத்திகளாய்ப் பாய்ந்து பார்வதத்தின் இதயத்தை ரத்தத்தால் நனைத்தது.

மறுநாள் காலை ஆறுமணி.

வழக்கமாய் ஆறு மணிக்கு எழுந்து விடும் பார்வதம் இன்னமும் படுக்கையில் படுத்துக் கிடந்தது சாந்தாவுக்கு ஆச்சர்யத்தை அளித்தது. மேடுற்ற வயிற்றைச் சுமந்த படிகையில் காப்பி டம்ளரோடு பார்வதத்தை நெருங்கினாள் சாந்தா. ''அத்தே, அத்தே, காப்பி ரெடி. எழுந்திரிங்க அத்தை. சூடு ஆறிடும்.''

பார்வதம் கண் விழித்தாள். கறுப்பு முகத்தில் மஞ்சள் மினுமினுக்க, கூந்தலை அழுந்த வாரி, சீவி மல்லிகைச் சரத்தைச் சூடி தாய்மையுற்ற தளதளப்பில் பரிமளிக்கும் சாந்தாவைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்தாள். மெல்லிய குரலில் சொன்னாள்: ''வெச்சுட்டுப் போம்மா....''

சாந்தாவுக்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. 'வெச்சிட்டுப் போம்மா...' இந்த இதமான வார்த்தைகள் தனக்காகச் சொல்லப்பட்டதுதானா? குழம்பிப் போய் அத்தையைப் பார்த்துச் சிரித்தபடி சொன்னாள்: ''அத்தை, நான் லாவண்யா இல்லே.''

அத்தை புன்னகைத்தாள். ''தெரியும், போம்மா சாந்தா.''

சாந்தாவுக்குக் கண்களில் சட்டென்று நீர் வழிந்தது.

அந்த வீட்டில் அடியெடுத்து வைத்த நாள் முதலாய் இந்த விநாடி வரை ஒலிக்காத அமுதமான வார்த்தைகளல்லவா அவை?

நெகிழ்ச்சியோடு — ஏதோ சொல்ல வாயெடுத்தான் சாந்தா.

பக்கத்து அறையினின்றும் தயாளன் வெளிப்பட்டான்.

''அம்மா...'' — குரல் கொடுத்தபடி பார்வதத்தை நெருங்கினன். சாந்தா காப்பி டம்ளரோடு ஒதுங்கி நின்ருள்.

''என்னடா தயாளா?'' என்ருள் பார்வதம்.

தயாளன் சில விநாடிகள் தயங்கினன். பின்பு மெதுவான குரலில் ஆரம்பித்தான். ''அம்மா,லாவண்யா அவங்கம்மா வீட்டுக்குப் போய் ரெண்டு மாசம் இருந்துட்டு வர ஆசைப்படறு...''

சாந்தாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. பார்வதத்தை ஏறிட்டாள்.

''அப்படியா? சந்தோஷமா போயிட்டு வரட்டும்.''

சாந்தாவுக்கு அந்தக் காலைப் பொழுது தந்த அடுக்கடுக்கான சம்பவங்கள் அவளை வியப்பில் ஆழ்த்தின.

பார்வதத்தின் கால்களில் விழுந்து வணங்கி விட்டு சூட்கேஸை எடுத்துக் கொண்டு கணவனேடு ஆட்டோவில் பெருமிதமாய் அமர்ந்து புறப்பட்டாள் லாவண்யா.

ஏதோ ஒரு நாடகம் தன் முன் அரங்கேறு வதைப் போன்ற உணர்வு பார்வதத்தின் உடம்பு பூராவும் வியாபித்திருந்தது. சாந்தாவின் அப்பா பார்வதத்தை நெருங்கினர்.. எதிரிலிருந்த நாற்காலியில் அமர்ந்தபடியே சொன்னர்.

''அப்போ இன்னிக்குச் சாயந்திரம் .... சாந்தாவை அழைச்சுட்டுப் போகலாம்ன்னு இருக்கோம். வீட்டுக்குப் பெரியவங்க நீங்க உத்தரவு தரணும்...''

பார்வதம் உள்ளத்தில் பீறிட்ட மகிழ்ச்சியோடு தலையசைத்த அதே விஞடி சாந்தா சமையலறையினின்றும் புயலாய் வெளிப்பட்டாள்.

''அப்பா. நான் நம்ம வீட்டுக்கு வரப் போறதா இல்லே.''

பார்வதமும் சாந்தாவின் அப்பாவும் ஒரு சேரத் திடுக்கிட்டுத் திரும்பினர்கள்.

''என்னம்மா அப்படிச் சொல்றே?''

''அப்பா... லாவண்யா இங்க இருப்பாங் கற நம்பிக்கையிலே நான் நம்ம வீட்டுக்கு வர நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனல்... லாவண்யா திடீரென்று அவங்கம்மா வீட்டுக்குப் புறப்பட்டுப் போயிட்டா.. நானும் புறப்பட்டு உங்களோட வந்துட்டா, அத்தையாலே வீட்டு வேலைகளைச் செய்ய முடியாதப்பா.வேலைக்காரி சமையல் பண்ணறதாலு இந்த வீட்டு ஆம்பிளைகளுக்குப் பிடிக்காது. ஏற்கெனவே அத்தைக்கு ஆஸ்துமா. பனிக் காலம் வேற ஆரம்பமாகப் போகுது... அத்தை படுத்துட்டா. கவனிக்க இங்கே யாரப்பா இருக்காங்க?''

சாந்தாவின் வார்த்தைகள் இன்னமும் கரகரந்தன.

புண்பட்டிருந்த பார்வதத்தின் இதயத்தை மயிலிறகாய்ச் சாந்தாவின் வார்த்தைகள் தடவின. சாந்தாவின் அப்பா குறுக்கிட்டார். ''நீ சொல்றது சரிதாம்மா. ஆனு இது உனக்குத் தலைப்பிரசவமாச்சேம்மா. செய்ய வேண்டிய சீர் சடங்கு எல்லாம் நம்ம வீட்லதாம்மா பண்ணனும். தலைப்பிரசவம் தாய் வீட்டிலே தாம்மா நடக்கனும்.''

சாந்தா இடை மறித்தாள். ''அப்பா! நீங்க செய்ய வேண்டிய சீர் சடங்கு எல்லாமே பண்ணுங்க. நான் வேண்டாம்ன்னு சொல்லலே. ஆனல் அதையெல்லாம் அம்மா வீட்டிலேதான் பண்ணனும்ன்னு சட்டமில்லையே. இங்கக்கூட பண்ணலாம். இந்த வீடும் எனக்குத் தாய்வீடுதான். அத்தையும் எனக்கொரு அம்மாதான்.''

''அம்மா சாந்தா!'' — பார்வதம் உடம்பெல்லாம் சிலிர்க்க — நெகிழ்ந்து போய் எழுந்தாள். சரேலெனச் சாந்தாவை அணைத்துக்கொண்டு ஒரு சிறு குழந்தையைப் போல் அழ ஆரம்பித்தாள்.

அத்தை ஏன் இப்படி அழுகிருள்?

சாந்தாவுக்குப் புரியவில்லை.

---



'கேரோ'வைக் கண்டுபிடித்தவர்கள் இடது சாரியினர் என்று கூறப்படுகிறது. ஆனல் உண்மை அதுவல்ல. போன நூற்றுண்டிலேயே அந்த வழக்கம் வந்து விட்டது. கேரோவைக் கண்டுபிடித்தவர் சைதன்ய மகா பிரபு என்ற பக்தர். அவர் அடிக்கடி பகவான் மேல் துதிப் பாடல்கள் பாடுவார். அதை விரும்பாத வங்காள நவாபு அந்தப் பாடல்களைப் பாடக் கூடாது என்று தடை விதித்தார். அதனுல் சைதன்யரும் மற்ற பக்தர்களும் ஒரு நாள் அந்த நவாபின் மாளிகையைச் சுற்றி நின்றுகொண்டு மத்தளத்துடன் துதிப் பாடல்களைப் பாடிக் கொண்டே இருந்தார்கள். இதைக் கவனித்த நவாபு தடையை நீக்கிவிட்டார்.

ஆதாரம்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல்: அனு.



# யாருக்கு வேணும் உங்க இரக்கம்?

## சிவசங்கரி

ஆடிட்டரிடம் வேலை முடிந்து விட்டது. வெளியே வந்து காரில் அமர்ந்தேன்.

ப்ஷு! என்ன வெயில்!

குளுமைக்குப் பிறந்த நாள் முதற்கொண்டு அடிமைப்பட்டுப் போயிருந்த உடம்பு சண்டித்தனம் பண்ணியது.

நான் பிறந்து வளர்ந்து, படித்து ஆளானது இதோ பதினெட்டு மைல் தள்ளி இருக்கும் ஏற்காட்டில்தான்.

அப்பா பெரிய டீ, காப்பி எஸ்டேட் சொந்தக்காரர். அப்பாவின் மரணத்துக்குப் பிறகு அப்பாவுக்குத் தப்பாத பிள்ளையாய் நான் எஸ்டேட்டைப் பார்த்துக் கொள்கிறேன்.

பத்து நாட்களுக்கு ஒரு முறை ஏதாவது சாமான் வாங்க, ஆடிட்டரைப் பார்க்க, இல்லே, நல்லதாய் ஸினிமா பார்க்க என்று இப்படிச் சேலத்துக்கு வருவது வழக்கம்தான்.

மணி என்ன?

ஐந்தா?

நேஷனல் ஹோட்டலில் ஒரு கப். காப்பி சாப்பிட்டுவிட்டுக் கிளம்ப வேண்டியதுதான்.

அலுப்புடன் காரைக் கிளப்பப் போன சமயம் அந்தப் பையனைப் பார்த்தேன்.

சற்றுத் தள்ளி இருந்த குப்பைத் தொட்டியில் குனிந்து எதையோ தேடிக் கொண்டிருந்தான்.

நடிப்பு: திரு எம். மோகன்,
திரு ராஜேந்திரன்

என்ன தேடுகிறான்?

எதைத் தொலைத்து விட்டுத் தேடுகிறான்?

இரண்டு நிமிஷத்தில் நிமிர்ந்து நின்ற பையனின் முகத்தில் அலுப்பும் சோர்வும் வெளிப்படையாகத் தெரிந்தன.

கைகளைத் தூக்கிச் சோம்பல் முறித்தவன் என்னைப் பார்த்துவிட்டு அவனை நான் கவனிப்பதை உணர்ந்தவனாய் மெல்ல நடந்து என்னிடம் வந்தான்.

கிட்டத்தில் வந்து நின்றான்.

''ரெண்டு நாளாச்சு சாப்பிட்டு; ஏதாச்சும் தர்மம் பண்ணுங்க ஐயா...''

ஒரு கையை என்முன் நீட்டிச் சின்னக் குரலில் அவன் கெஞ்சினான்.

ஓ! குப்பைத் தொட்டியில் சாப்பிட ஏதாவது கிடைக்குமா என்றுதான் துளாவினானா!

நான் அவனை முழுசாய்ப் பார்த்தேன்.

> ''ஒரு துப்பாக்கி சுவரின் மீது மாட்டப் பட்டிருப்பதாகக் கதைத் தொடக்கத்தில் நீங்கள் வருணிப்பீர்களானால், கதையின் முடிவில் துப்பாக்கி கட்டாயம் வெடித்தாக வேண்டும். அது வெடிக்கவில்லையென்றால் நீங்கள் கதையின் முற்பகுதியில் அதைக் குறிப்பிட்டிருக்கவே கூடாது.''
>
> —செகாவ்
>
> —தகவல்: டாக்டர் இரா. மோகன்

சின்னப் பையன். எத்தனை வயசிருக்கும்? பன்னிரண்டு? பதின்மூன்று?

அப்படி ஒன்றும் பங்கறையாய்த் தெரிய வில்லை. முகமும் கண்களும் துருதுருவென்று நன்றாய் இருக்கிற மாதிரிதான் பட்டது.

''சின்னக் குழந்தைகளுக்கு நான் பிச்சை போட மாட்டேன் பையா... அது கெட்ட பழக்கம்.... வீணாய் இங்கே நிக்காதே... போ.... போய்ப் பள்ளிக்கூடத்திலே படி... இல்லேன்னு ஏதாவது வேலே பண்ணு..... போ....''

என் பேச்சால் அவன் எதிர்பார்ப்பு அடி பட்டுப் போனமாதிரி அவன் முகம் சிறுத்துப் போயிற்று. கண்களில் காசு கிடைக்கும், ஏதாவது சாப்பிடலாம் என்ற ஆர்வம் போட்டிருந்த வெளிச்சம் பட்டென்று அறுந்து போனது.

ஒரு கணம்தான்.

என்ன தோன்றியதோ, தோளில் போட்டிருந்த அழுக்குத் துண்டைக் கையில் எடுத்துக் கொண்டு பரபரவென்று என்னைக் கேட்காமலேயே வண்டியை அழுத்தி அழுத்தித் துடைக்கத் தொடங்கினான்.

அவன் துண்டை எடுத்த விதமும், வேக மாய்க் காரைத் துடைக்கும் வேகமும்... பரவாயில்லே.... கெட்டிக்காரப் பையன் தான். ஏதாவது வேலை பண்ணக் கூடாதா என்று கேட்டதற்காக உடனே அதைப் பிடித்துக் கொண்டு விட்டானே! எனக்குச் சந்தோஷமாய் இருந்தது.

''தம்பி! உன் பேர் என்ன?''

வண்டியைத் துடைப்பதை நிறுத்தாம லேயே அவன் பதில் சொன்னான்.

''ஆறுமுகங்க....''

''இப்படி வா... துடைச்சது போதும்...''

அவன் வந்தான்.

''நிஜமாகத்தான் ரெண்டு நாளாச் சாப் பிடலையா?''

அவன் ஆமாம் என்று தலை ஆட்டினான்.

எனக்குத் திடுமென்று ஸரஸாவின் நினைப்பு வந்தது.

ஸரஸா — என் மனைவி, ஒரு வாரமாய் மூணு முணுப்பதும் ஞாபகத்துக்கு வந்தது.

''ஆ காட்டுங்கள்! பேரீச்சம் பழம் போடு றேன்''
''ஏது?''
''ஆக்ஸிடெண்ட்டான உங்கள் ஸ்கூட்டரை விற்றும் பேரீச்சம்பழம் வாங்கி அனுப்பி யிருக்காங்க உங்க மனைவி''



ஸரஸா கோயமுத்தூர்க்காரி. நல்ல வசதி யான குடும்பம்.

மணமான இந்த எட்டு ஆண்டுகளில் எங்களுக்கு இரண்டு பையன்கள்.

மூத்தவன் சித்தார்த்தனுக்கு ஆறு வயசு.

இளையவனுக்கு இப்போதுதான் ஏழு மாசம்.

சின்னப் பையனோடு சரஸாவுக்குச் சரி யாக இருக்குமாதலால், மூத்தவனோடு மன்றாட, விளையாட, பேசிப் பொழுதைக் கழிக்க எனக் கோயமுத்தூரிலிருந்து ஒரு சோக்ரா பையனைச் சரஸாவின் பெற்றோர் எங்களோடு இருக்க அனுப்பி யிருந்தார்கள்.

அந்தப் பையனுக்கு என்ன கேடு வந்ததோ, போன வாரம் 'ஆயாவைப் பார்க்கணும்' என்று விடாமல் அழுது பிடிவாதம் பண்ணிக் கிளம்பிப் போய் விட்டான்.

சோட்டா மோட்டாப் பையன் இல்லாமல் சரஸா ஒரு வாரமாய்க் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள்.

இப்போது ஆறுமுகத்தையும் அவன் துரு துரு முகத்தையும் பார்க்கையில் எனக்கு இவனை அழைத்துப் போய் வேலையில் அமர்த் தினால் என்ன என்ற எண்ணம் உண்டா யிற்று.

பாவம் — இந்தப் பையன் — பார்த்தால் நல்லவனாய்த் தெரிகிறான்; கறுகறுப்பாய் இருக்கிறான்; வேலை வெட்டி இல்லாமல், சோத்துக்குக் கஷ்டப்படுகிறான்; அழைத்துப் போனால் என்ன?

''வேலை ஒண்ணு தந்தா ஒழுங்காப் பண் ணுவியா?''

''......''

''என் வீட்டிலே உன்னை மாதிரி ஒரு பையன் இருக்கான். அவனோட விளையாடி, அவனைப் பார்த்துக்கறதுதான் உன் வேலே... மூணு வேளை சாப்பாடு போட்டுச் சம்பளம், துணி மணி எல்லாம் தரேன் — என்ன சொல்றே?''

அவன் என் பேச்சை நம்ப முடியாதவன் மாதிரி கண்களை விரித்துக் கொண்டு ஒரு பார்வை பார்த்தான்.

மௌனம் சம்மதத்தின் அறிகுறி என்று நானே தொடர்ந்தேன்.

''உன் வீடு எங்கே இருக்கு?... என்னோடு காரில் வா.... அங்கே போய்ப் பெரியவங்க கிட்டே சொல்லிட்டுக் கிளம்பலாம்...' வேலை சேலத்திலே இல்லே.... அதோ அங்கே தெரியறது பாரு, ஏற்காடு மலை... அங்கே தான்....''

அவன் தலையை ஒடித்து நான் காட்டிய திசையைப் பார்த்தான்.

திடீரென்று புது உற்சாகம் கொப்பளிக்க ''எந்த ஏற்காடுங்க? ரோசாப்பூ ரவிக்கைக் காரி படம் எடுத்தாங்களாமே, அந்த ஏற் காடுங்களா?'' என்றான்.

பேஷ் — பையன் பிழைத்துக் கொள்வான்! கவலை இல்லை.

நான் 'ஆமாம்' என்றேன்.

''வரேங்க.... எங்க.... அங்கே அடிக்கடி படம் எடுப்பாங்களா? பாக்கலாமா?''

நான் சிரித்தேன். சரியான சினிமாப் பைத்தியம் போலிருக்கிறது.

''உன் வீடு எங்கேன்னு சொல்லலியே—''

ஆறுமுகம் நெளிந்தான்.

''அது ஆத்தூருக்குப் பக்கமுங்க. அப்பாரு போன வருஷம் செத்துட்டாரு... அப்பாலே கழனியிலே வேலே பண்ண எனக்குப் புடிக்கலே.... மெட்ராசுக்குப் போனா நல்ல வேலே கெடைக்கும்னுங்க... கௌம்பிட்டேன். ஆத்தூர் வரைக்கும் வைக்கோல் எடுத்தார வண்டிலே வந்தேன். அப்பாலே ஒரு லாரிக்காரரு நிப்பாட்டி ஏத்திக்கிட்டாரு. நேத்து இங்கனே கொண்டாந்து விட்டாரு...''

நாலு வரியில் அவன் தன் வாழ்க்கை வரலாற்றைச் சொல்லி விட்டான்.

ஆறுமுகத்தை எனக்கு ஏனோ பிடித்து விட்டது.

வண்டியில் அவனை ஏற்றிக் கொண்டேன்.

மலை ஏறி வீட்டை அடைந்த போது இரவு மணி எட்டு.

காரிலிருந்து இறங்கிய ஆறுமுகத்தைப் பார்த்த சரளாவுக்கு ஆச்சரியம்.

''யாரிவன்?''

''சொல்றேன்... வா'' என்றவன் அவளோடு படுக்கை அறைக்குச் சென்று பூரா விவரமும் கூறினேன்.

என் செய்கை சரளாவுக்குப் பிடிக்கவில்லை என்பது அவள் முகத்தைக் கோணிக்கொண்டதிலிருந்து புரிந்தது.

''வேலைக்குப் பையன் வேணும்னு நான் தொந்தரவு பண்ணறது நிஜம்தான்; அதுக்காக இப்படி ஊர் பேர் தெரியாத பையனையா அழைச்சுண்டு வருவா? நடுத்தெருலேந்து ஒரு பையனையா...?''

நான் அவளை முடிக்க விடவில்லை. ''ஆறுமுகம் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவனாத் தான் தோணறான்; படிச்சிருக்கான், சுறுசுறுப்பா இருக்கான்; அப்புறம் என்ன? தெருவிலே பார்த்துக் கூட்டிட்டு வந்தேன்னு மட்டமா? பாவம்... ஜலேக் ஹும்... ரெண்டு மணி நேரமா அவனோட பேசி, பழகின வரைக்கும் அவன் கெட்டிக்காரப் பையனாத் தோன்றான்.... பிச்சை கேட்டாங்கறதுக்காக ஒருத்தனை மட்டமா நினைக்கக் கூடாது. இவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து, நல்லது கெட்டதைச் சொல்லிக் கொடுத்தா முன்னுக்கு வந்துடுவான்....நீ வேணா பாரு, ஸரஸ்.... இன்னும் ஆறு மாசத்துலே இவனை எப்படி மாத்திக் காட்டறேன் பாரேன்....''

நான் பெரிசாய் லெக்சர் அடித்தேன். முயலுக்கு மூன்று கால் என்று சாதிக்கும் என் குணம் தெரிந்த சரளாவும் எக்கேடு கெட்டுப் போங்கள் என்று போய்விட்டாள்.

ராத்திரி சாப்பிட்டோம். இட்லி, சாதம், மோர் வகையறாக்களை ஆறுமுகம் உண்ட பின், சரளா அவனுக்கு ஜமக்காளம், கம்பளி, தலையணை கொடுத்துப் பின்கட்டில் படுக்கச் சொன்னாள்.

காலையில் நான் எழுந்திருக்க நேரமாகி விட்டது. எட்டு என்றது கடிகாரம்.

இத்தனை நாழியா தூங்கினேன்?

எழுந்து பல் தேய்த்து விட்டு டைனிங் ஹாலுக்குப் போனேன்,



அவர்: நம்ம கல்வி முறை அவ்வளவு சரியில்லேங்க!|

இவர்: சொல்லி வச்சது மாதிரி உங்க ஏழு பசங்களும் இந்த வருஷமும் பெயிலாயிட்டாறுங்களா..... வெரி சரி!

உ. ராஜாஜி

---

பின் வராந்தாவில் தோட்டக்காரன், எஸ்டேட் மேஸ்திரி அப்புறம் சரஸ்.

வாட் ஹாபண்ட்?

கிட்டப் போனேன்.

வராந்தா சுவரில் கரித் துண்டால் கொட்டையாய் எழுதியிருந்த எழுத்துக்கள் என்னைக் கவர்ந்தன.

''சினிமாக் கொட்டகை கூட இல்லாத ஊரிலே நான் இருக்க மாட்டேன். நான் போறேன் — ஆறுமுகம்.''

''நேத்தி ராத்திரியே தோட்டக்காரன் கிட்டே படக் கொட்டகை எங்கே இருக்கு? ரோசாப்பூ ரவிக்கைக்காரி ஷூட்டிங் எங்க எடுத்தாங்க'ன்னு குடைஞ்சிருக்கான். அப்புறம் கார்த்தாலே எழுந்து மேஸ்திரிகிட்டயும் இதையே கேட்டிருக்கான். அவன் 'கொட்டகையும் கிடையாது, ஒண்ணும் கிடையாது. சேலத்துக்குத்தான் போகணும்னு' சொல்லியிருக்கான். நான் குளிக்கப் போன சமயத்திலே இப்படிக் கரித் துண்டாலே எழுதிட்டு, தன் துணிமணிகளோட ஓடிட்டான். நல்ல வேளை வேறே பாத்திரம் பண்டம் எதையும் எடுத்துட்டுப் போகலே.''

சரளாவின் குரலில் கேலியும், 'பார்த்தேளா, உங்க கருணையோட விளைவை?' என்கிற நமுட்டுச் சிரிப்பும் கலந்திருப்பது நன்றாய்ப் புரிந்தது.

ஆத்தூரிலிருந்து சேலத்துக்கு வந்த பையனுக்கு ஏற்காட்டிலிருந்து இதோ இருக்கும் சேலத்துக்குத் திரும்பிப் போவதா கஷ்டம்? எத்தனையோ பஸ்கள், எத்தனையோ லாரிகள்— என்ற சமாதான நினைப்பையும் மீறிக் கொண்டு 'சின்னப் பையன் ஆயிற்றே! ஒழுங்காய் மலை இறங்கிப் போக வேண்டுமே' என்ற கவலை என் நெஞ்சுகள் பரவுவதை சரளா புரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டிப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு உள்ளே போகத் திரும்பினேன்.

# பாசக்கோட்டில் இரு புள்ளிகள்!

பி. ரங்கநாயகி

விஸ்வத்தைப் பெற்றவரின் கதை முடிந்து விட்டது. நாட்கள் போனதே தெரியாமல் அன்றோடு இருபது தினங்கள் ஆகி விருந்தன. அது என்னவோ ஒரு கல்யாணச் சாவுதான். தனது ஐம்பத்து ஐந்தாவது வயதில் அந்த மகராஜி பூவோடும் பொட்டோடும் போய்ச் சேர்ந்து விட்டாள்.

இனி — நரம்புகள் தளர்ந்து, வயோதிகத்தின் கட்டாயத் துணையில், ஜீவனின் உணர்ச்சித் துடிப்புகளைத் தன்னிச்சையாக வெளிப்படுத்த முடியாத பருவத்தில், வளைய வரும் அந்தத் தந்தைக் கிழவரின் மனத்தைத் தேற்றி, உற்சாகப்படுத்திக் காப்பாற்ற வேண்டியது விஸ்வத்தின் பொறுப்பு. விஸ்வம் தயாராகத்தான் இருந்தான்.

அன்று விடிந்ததிலிருந்து கிழவருக்கு உடம்பு சரியில்லை. சாதாரணத் தலைவலியென்று சொன்னவருக்கு மாலையில் உடம்பும் சுட ஆரம்பித்தது. மனத்தில் சோகத்தைக் கவ்விக் கொண்டு ஒரு மூலையில் முடங்கிக் கிடந்த அவரைக் கண்டபோது விஸ்வத்தின் மனத்தை வேதனை பிடுங்கித் தின்றது. செலவைப் பார்க்காமல் குடும்ப டாக்டர் ராமநாதனை வீட்டிற்கே அழைத்து வந்து தந்தையின் உடல்நிலையைக் காட்டலாம் என்று முடிவு கட்டினான்.

இவ்வாறு அவன் முடிவு செய்ததற்கு இன்னொரு காரணமும் இருந்தது. அது மிகவும் முக்கியமான காரணம்.

அவர்கள் குடியிருக்கும் கஜபதி லாலா தெருவிலிருந்து டாக்டர் ராமநாதன் வீட்டுக்குப் போவதற்கு டி. பி. கோயில் தெரு வழியாகத்தான் போக வேண்டும். அதுதான் சரியான வழி. ஆனால் போகும் வழியில் 'ராமானுஜக் கூடம்' கல்யாண மண்டபம் இருக்கிறதே! அவரை எப்படி அதைத் தாண்டி அழைத்துச் செல்வது என்பதுதான் விஸ்வத்தின் பிரச்னை. சுற்று வழியாக மாட வீதியில் புகுந்து செல்லலாமென்றால் அங்கேயும் 'யதுகிரி' கல்யாண மண்டபம் இருக்கிறது. என்ன செய்வது என்று விஸ்வம் யோசனை செய்யலானான். போகும் வழியில் கல்யாண சத்திரத்தைத் தவிர்க்க வேண்டுமானால் ஹைரோடில் சுற்றிப் போய்த் திரும்பி நடுவில் போகும் நாற்றமடிக்கும் முட்டுச் சந்து வழியாகத்தான் போக வேண்டும்.! நாற்றத்தைச் சகித்துக் கொண்டு அந்தச் சந்து வழியாகப் பெரியவரை அழைத்துச் செல்வது விஸ்வத்துக்கு இஷ்டமில்லை. குடும்ப டாக்டரை விடவும் மனசில்லை.

கடைசியில் நாத்தச் சந்து வழியாகவே போய் விடலாம் என்று முடிவு பண்ணி அவருடன் புறப்பட்டான்.

ஆனால் பிடிவாதமாக அவன் தந்தை சொன்ன பதில் விஸ்வத்தைப் பெருத்த சங்கடத்தில் ஆழ்த்தியது:

'ஏண்டா விசு! சுத்திண்டு அந்த நாத்தம் பிடிச்ச சந்து வழியா எதுக்குப் போகணும்றே? எனக்குப் பார்த்தசாரதி பெருமாளைக் கோவில் வெளியிலே இருந்தாவது தரிசனம் பண்ணணும் போல் இருக்கு. டி. பி. கோவில் தெரு வழியாகவே போயிடலாம் வா!' என்றார்.

ஒரு கணம், அந்தத் தெரு வழியாகச் செல்லும் போது — அதுவும் ராமானுஜ கூடத்தைத் தாண்டும்





போது — என்ன நடக்கும் என்று விஸ்வத்தின் மனம் கலக்கத்துடன் எண்ணமிட்டது. பழைய சம்பவம் அவனது நினைவில் படரத் தொடங்கிற்று.

விஸ்வத்தின் தங்கை சாந்திக்கு விடிந்தால் திருமணம். விஸ்வத்திற்குப் பிறகு பதினைந்து ஆண்டுகள் குழந்தையே இல்லாமல் இருந்த வீட்டில் சாந்தி பிறந்தபோது ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அதுவும் 'ஆசைக்கு ஒரு பெண்' ஆயிற்றே. தனது நாற்பத்தைந்தாவது வயதில் பிறந்த அந்தப் பெண் மீது அதிகப்படியான பாசத்தை அவன் தந்தை செலுத்தியதில் அதிசயம் இல்லைதான். விஸ்வத்துக்கும் தனது ஒரே தங்கை மீது கொள்ளை ஆசை. பொழுது போக்குக்காக உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்த சாந்திக்கு. கையிலிருந்த பணத்தையெல்லாம் திரட்டிப் போட்டு ஒரு நல்ல இடமாக மாப்பிள்ளை பார்த்து ஏற்பாடு செய்திருந்தார், அவனுடைய தந்தை. தனக்கு வரவிருக்கும் மாப்பிள்ளை எம். ஏ. படித்து பாங்கில் ஆபீசராய் இருக்கிறார் என்று பார்த்தவர்களிடமெல்லாம் பெருமையாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஆயிற்று. ஜானவாசம் ஆகி, சாப்பாடும் முடிந்து விட்டது. விடியற்காலை முகூர்த்தம் ஆனதால் மணப்பெண்ணைச் சீக்கிரம் தூங்கும்படி சொல்லி அவளையும் அவளது தோழிகள் இருவரையும் ஒரு தனியறையில் விட்டு மற்றவர்கள் சென்று விட்டனர்.

கல்யாணக் குதூகலத்தில், கொஞ்ச நாட்களாகவே சாந்தி உற்சாக மன நிலையில் இல்லாமல் இருந்ததை, விஸ்வமோ, அவனது தந்தையோ, மற்றவர்களோ சரியாகக் கவனிக்கவில்லை.

விடியற்காலை மணப்பெண்ணை எழுப்ப வந்தவர்களுக்கு ஒரு பெரிய ஷாக். சாந்தியைக் காணோம். ஆழ்ந்த தூக்கத்தில் இருந்த தோழிகளை எழுப்பிக் கேட்டால் பேந்தப் பேந்த விழித்தனர்.

சாந்தி படுத்திருந்த தலையணைக்குக் கீழிருந்த கடிதம் எல்லோருடைய கேள்விக் கணைகளுக்கும் பதிலாக அமைந்தது. தனக்கு இத் திருமணத்தில் துளிக்கூட இஷ்டமில்லை என்றும், இதுவரை வெளிச் சொல்ல பயந்து கொண்டு சும்மா இருந்ததாகவும், தான் மனமார நேசிக்கும் தனது சக ஊழியனை ஜார்ஜைத் திருமணம் செய்து கொண்டு மதம் மாறிவிடப் போவதாகவும், தன்னை எவரும் தேட வேண்டாம் எனவும் சாந்தி எழுதி வைத்திருந்த கடிதம் எல்லோரையும் பார்த்து அலட்சியமாகச் சிரித்தது.

நடிப்பு திரு. ஆர். கிருஷ்ணன்,
திரு கே. வி. ஆர். சாரி.

> கோயில்களும் வீடுகளும் கட்டுவதில் எப்படி சிற்பக்கலை என்று இருக்கிறதோ, அப்படியே கதைகள் கட்டுவதிலும் சிற்பக் கலை இருக்கிறது. கதைகளிலும் முகப்புக்கள், கோபுரங்கள், பிராகாரங்கள், கர்ப்பக் கிருஹங்கள் எல்லாம் உண்டென்று சொல்லலாம்.
>
> —ரசிகமணி டி. கே. சி.
>
> 'கவிஞயாழியின் கனவு' முன்னுரையில்

கல்யாணச் சத்திரத்தில் ஏகப்பட்ட குழப்பம். இதுமாதிரி 'ஓடுகாலி' பெண்ணைப் பெற்றதற்குப் பிராயச்சித்தமாகக் கிணற்றில் விழுந்து சாகலாம்' என்று பின்னே விட்டார் விஸ்வத்தின் தந்தையை ஏசிவிட்டு மூட்டை முடிச்சுகளுடன் கிளம்பி விட்டனர்.

அன்றோடு சாந்திக்கும் அக் குடும்பத்துக்கும் இடையே இருந்த பந்தம் அறவே அறுந்தது.

இந்தப் பேரிடியை மற்றவர்கள் கஷ்டப்பட்டுக் கொண்டு தாங்கிக் கொண்டனர். ஆனால் விஸ்வத்தின் தந்தையால் மட்டும் ஜீரணிக்க முடியவில்லை. அன்று மயக்கம் போட்டு விழுந்தவர் தம் சுயநினைவைப் பெறுவதற்கு மூன்று தினங்கள் ஆயின. ஆனால்—

ஒரு புதிய பிரச்னை அந்தக் குடும்பத்தைப் பிடித்துக் கொண்டது. விஸ்வத்தின் தந்தை வெளியே செல்லும்போது வழியில் எங்கேயாவது ஒரு கல்யாணச் சத்திரத்தைக் கண்டு விட்டால் போதும்! ''ஏய் சாந்தி! என் மானத்தை வாங்கிட்டு ஓடிப் போயிட்டியேடீ! நீ எங்கேடி போயிட்டே? திரும்பி வந்து கல்யாணம் பண்ணிக்கோடீ... சாந்தி கண்ணு, வந்துடும்மா...!'' என்று உரக்கக் கத்தியபடி, கல்யாணச்சத்திரத்தினுள்சென்று உட்கார்ந்து கொண்டு 'ஓ'வென்று அழத் தொடங்கி விடுவார். அந்தச் சமயங்களில் யாராலும் அவரிடம் நெருங்க முடியாது. எவரேனும் கிட்ட வந்தால் கையில் கிடைக்கிற பொருளால் அவர்களை அடிக்க ஆரம்பித்து விடுவார். அவரைச் சமாதானப் படுத்தி, பழைய நிலைக்குக் கொண்டு வந்து வீட்டுக்கு அழைத்து வருவது என்பது விஸ்வத்தின் தாய் விசாலத்தால் மட்டுமே சாத்தியமான விஷயம். இதனால் விஸ்வம் தன் தந்தையை அதிகம் வெளியே போகவே விடமாட்டான்.



'இப்படிப்பட்ட' அவரை எப்படி ராமாராவ் கூட கல்யாண மண்டபத்தின் வழியாக அழைத்துச் செல்வது என்று விஸ்வம் பெருத்த குழப்பத்தில் ஆழ்ந்திருந்த போது அவனது தந்தை சொன்ன பதில் அவனைத் திகைப்புக்குள்ளாக்கியது.

''என்டா விசு, நான் பழையபடி கல்யாண சத்திரத்துக்குள்ளே போய் அந்த ஓடிப்போன சண்டாளி ஞாபகமா உட்கார்ந்துடுவேன்னு பயப்படறயா? இனி மேலே அப்படியெல்லாம் செய்ய மாட்டேன்டா! அவளைப் பத்தி எனக்கு இனிமேலே கவலை கிடையாது. நீ, வா! நாம் டி.பி. கோவில் தெரு வழியாகப் போயிட்டு வரலாம்!'' என்றார்.

அவர் எவ்வளவுதான் சொன்னாலும் சத்திரத்தைத் தாண்டும் வரையில் விசுவத்தின் உள்ளத்தில் தெம்பே இல்லை. ஆனால் அவர் கல்யாண மண்டபத்தை அலட்சியமாகப் பார்த்துவிட்டுத் தாண்டிச் சென்றார்.

விஸ்வத்தின் மனத்தில் பெரியதொரு பாரம் இறங்கினாற்போல் இருந்தது. ஆயிற்று, இன்னும் ஒரு பர்லாங் நடந்தால் டாக்டர் வீடு வந்து விடும். எண்ணத்தின் ஆக்கிரமிப்பில் விஸ்வம் தந்தையை அழைத்துக் கொண்டு சென்று கொண்டிருந்த போது —

''விசாலம்.. என்னைத் தனியா விட்டுட்டுப் போயிட்டியேடீ! என்னைத் தனியா விட்டுட்டுப் போறதுக்கு உனக்கு எப்படிடீ மனசு வந்தது? நீ எங்கேயும் போகலேடீ! நீ இங்கே தான் இருக்கே, அடி விசாலம், இதோ வரேன்டீ!'' என்று இறந்துவிட்ட தனது மனைவியை அழைத்தபடி அவர் வழியிலுள்ள சம்பத் நர்சிங் ஹோமுக்குள் கூக்குரலிட்டபடி புகுந்து ஓட ஆரம்பித்து விட்டார்.

தன்னுடைய தாய் இறப்பதற்குச் சில நாட்கள் முன்பு 'சம்பத் நர்சிங் ஹோமில்' இரண்டு தினங்கள் தங்கி இருந்ததும், தந்தையை அந்த 'நாதத' சந்து வழியாக ஒரு நாள் அழைத்து வந்ததும் விஸ்வத்தின் நினைவில் பளிச்சிட்டு மறைந்தது.

மகளின் பிரிவு நினைவில் பாயும்போது, உணர்ச்சி வயப்பட்டவராய்த் தன்னிலை மறந்து கல்யாண மண்டபங்களில் புகுந்து பிழியப் பிழிய அழுது வேதனையை அனுபவித்த அந்த வயோதிகத் தந்தையைச் சுய உணர்வுக்கு மீட்டு, சமாதானப் படுத்தி வீட்டுக்கு அழைத்து வர விஸ்வத்தின் தாய் விசாலத்தால் மட்டுமே முடிந்தது.

இப்போது, மனைவியின் மறைவில், உணர்ச்சிகள் கொப்பளிக்கச் சுற்றத்தையும், சூழலையும் மறந்து தன்னிச்சையாக ஓடும் தனது தந்தையைச் சமாதானம் செய்து, சுய நினைவுக்கு மீட்க யாருடைய உதவியை நாடுவது என்று புரியாமல் நடுத்தெருவில் ஸ்தம்பித்து நின்றான் விஸ்வம்!

# எனக்காக சம்பாதிப்பவர் இரண்டுபேர் ஒருவர் என் கணவர், இன்னொருவர் எனது பாங்க்.

நீங்கள் என்னை பாக்யசாலி என்று சொல்லலாம்.

ஆம், அந்த வகையில் நான் பாக்ய-சாலிதான்.

ஐந்தாண்டுகளுக்கு முன் என் தந்தை-யிடமிருந்து பிதுரார்ஜித சொத்தின் பங்காக எனக்குக் கொஞ்சம் பணம் கிடைத்தது. அன்றைய தினமே எனது, பாக்யத்தின் ஆரம்ப தினம்.

எனது கணவரின் ஆலோசனையின்படி அந்தத் தொகையை யூகோபாங்கின் டெபாஸிட் ஸெர்ட்டிபிகேட் திட்டத்தின் கீழ் முதலீடு செய்தேன்.

அப்பொழுதே என் குடும்பத்திற்கென சம்பாதிப்பவரின் எண்ணிக்கையும் இரண்டாகியது.

இன்று யூகோபாங்க்கில் எனது சிறிய தொகை அதிகரித்துக் கொண்டே போகிறது.

காலம் வரும் பொழுது, இது போல் ஒரு தொகையை நானும் நிச்சயமாக என் அன்பு மகளின் கையில் பெருமையுடன் அளிக்க முடியும்.

பல்லாண்டு சம்பாத்யத்தின் பூரண நிறைவு.

## யூகோபாங்க்

### அளிக்கும் லாபகரமான டெபாஸிட் திட்டங்கள்

**ஸேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் திட்டம்**
**ஃபிக்ஸட் டெபாசிட் திட்டம்**
**டெபாஸிட் ஸெர்ட்டிபிகேட் திட்டம்**
**ரெகரிங் டெபாசிட் திட்டம்**
**க்ரோ யுவர் மனி ஸ்கீம்**
**டைனி ஸேவிங் ஸ்கீம்**
**மாதாந்திர பென்ஷன். திட்டம்**



**யுனைடெட்**

**கமர்ஷியல் பாங்க்**

உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

UCO/CAS-38/79 TAM

"பயமா இருக்கா? எங்கிட்டச் சொல்லேன். இவ்வளவு பயந்தாங்கொள்ளியா இருந்தா எப்படி? நிமிர்ந்து பாரேன்..." ராஜசேகரன் பூரணியை அணைத்துத் திருப்பி அவள் முகத்தை மெல்ல நிமிர்த்தினான்.

பூரணிக்குப் பெரிய கண்கள். மனசை மிகச் சுலபமாய் வெளியே காட்டிவிடும் தன்மை கொண்டவை. கண் மையோ, கறுப்புப் பென்சிலோ தேவைப்படாது. இயற்கையாய் அமைந்த சித்திரங்கள். பூரணி என்றவுடனே இந்தக் கண்கள்தான் அவன் நினைவுக்கு வருகின்றன. முதல் சந்திப்பிலேயே அவனுக்குக் கிளர்ச்சியைக் கொடுத்தன. பூரணியின் முகத்தை நிமிர்த்திப் பார்த்ததும் ராஜசேகரன் மிகவும் வேதனையடைந்தான். வெள்ளித் தட்டில் தேங்கிய ஜீரா மாதிரி அவள் விழி முழுக்கப் பயம் பளபளத்துக் கிடந்தது. அந்த அரை இருட்டிலும் அவள் கண்கள் வழியே அவள் மனம் முழுக்கப் புரிந்தது. ராஜசேகரன் அவளைத் தளர விட்டான். மெல்லச் சுருண்டு வந்த கடல் அலைகளைப் பார்க்கத் தொடங்கினான்.

# இருட்டு இடம்



"கஷ்டமா இருந்தா நீ இப்பவே கிளம்பிப் போ பூரணி. பயம்கிறது பெரிய ஹிம்சை. இந்த உலகத்திலேயே அது ஒண்ணுதான் ஹிம்சை. இத்தனை பயம் வெச்சுக்கிட்டு இரண்டு பேர் சிநேகமா இருக்கிறது இம்பாஸிபிள். உன்னோட பயம் எனக்கு வேதனையா இருக்கு. என் பூரணி பயந்து நடுங்கறதுல எனக்குச் சந்தோஷம் கிடையாது. இத்தனை பயத்தோட இந்த இருட்டுல உட்கார்ந்து நாம என்ன பேச முடியும்? நீ கிளம்பி வீட்டுக்குப் போ, பூரணி."

பூரணி அவனை உற்றுப் பார்த்தாள். வெகு தொலைவிலிருந்து வந்து கொண்டிருந்த அரை நிலவு ஒளியிலும் அவன் முக அமைப்புகள் தெளிவாய்த் தெரிந்தன. சீராய் இறங்கின மூக்கு, மெல்லிய மேலுதடு, அழுத்தமான முகவாய், சற்று மேடான நெற்றி, நகக் கீறல் மாதிரி அங்கே அடிக்கடி தோன்றும் சுருக்கங்கள், மென்மையாய் அதே சமயம் வளைந்து கூர்மையாய் முடியும் புருவங்கள். அழகு என்று சொல்ல முடியா விட்டாலும் அழுத்தமாய் ஒரு கவர்ச்சி அவன் உடம்பு முழுக்கப் பரவிக் கிடப்பதைப் பல முறை பார்த்திருக்கிறாள். இது ஒரு சேல்ஸ்மேன் கவர்ச்சி என்கிற மாதிரி ஆரம்பத்தில் பட்டாலும் அதற்கெல்லாம் அப்பால் அவன் அதிக திடம் உடையவனாக இருந்தான்.

**உணர்ச்சியுடன் வாழத் தெரிந்து, தாம் உணர்ந்ததைக் கடிதம் போல் எழுதத் தெரிந்த ஒவ்வொருவரும் தம் வாழ் நாளில் ஒரு சிறு கதையேனும் எழுதி வைத்து மறைய முடியும்.**

- யாரோ

டாக்டர் இரா. மோகன்

# மாறிக் கொண்டிருக்கிறது!

## பாலகுமாரன்

திடீரென்று ஒரு நாள் அவன் தலைக்கு மேலே இருக்கிற ட்யூப்லைட் சோக் பற்றிக் கொண்டது. மத்தாப்பு மாதிரி தரை முழுக்க நெருப்பை உதிர்த்தது. ஆளுக்கு ஆள் கத்தினார்கள். நாற்காலிகளை உருட்டிவிட்டு வெளியே ஓடினார்கள். இந்த ராஜசேகரன் மட்டும் சட்டென்று இவள் தோளைப் பற்றி, மேஜையில் ஏறி, மேஜையிலிருந்து ஷெல்புக்குத் தாவி மெயினை அணைத்தான். இறங்கி மௌனமாய்க் கையைத் துடைத்தபடி சோபாவில் உட்கார்ந்து கொண்டான். அவள் நன்றி சொன்னபோது அமைதியாக மறுத்தான்.

''அதான் உங்க கண்ணுலேயே தேங்க்ஸ் சொல்லிட்டீங்களே வார்த்தை எதுக்கு?''

''என்ன சொல்றீங்க?''

''உங்களுக்கு ரொம்ப அழகான கண்கள் பூரணி. உங்க கம்பெனியை விட்டுத் தெருவில் போனாக் கூட இந்த ரெண்டு கண்ணும் என் முதுகோடு ஒட்டிக்கிட்டு வராப்பலே ஒரு பிரமை. ப்ளீஸ் இதுக்காக நீங்க இன்னொரு தடவை தேங்க்ஸ்னு இங்கிலீஷில் சொல்ல வேண்டாம். கண்ணுக்கு மிஞ்சின பாஷை என்ன இருக்கு?''

அதற்குப் பிறகு அவனைப் பார்க்கிற போதெல்லாம் தன் கண்களைப் நினைத்துக் கொண்டாள். நினைவில் அதிகம் இடம் பெற்றவன் மெல்ல மனசைத் தொட்டான். பிறகு உடம்பைத் தொட்டான்.

ஒரு நாள், ''பூரணி, கொஞ்சம் கண்ணை மூடிக்கயேன். மூடின கண்ணு ஏதாவது சொல்லுதா பார்க்கலாம்'' என்றான்.

அவள் மூன்று நிமிடம் கண்களை மூடிக் கொண்டாள். அவன் மிருதுவாய் அவள் விழிகளில் முத்தமிட்டுத் திரும்பியதும் ''அது என்ன சொல்லிற்று?'' என்று கேட்டாள்.

'பூரணி என்கிற பெண் ரொம்ப நல்லவள். குழந்தை. எந்தக் காரணம் கொண்டும் இந்தப் பெண்ணைத் தவிக்க விடக் கூடாது' என்று அவை சொன்னதாக அவன் பதிலளித்தான். அப்படியே நடந்து கொண்டான்.

''எனக்குக் கல்யாணமாகி ஒரு குழந்தை இருக்கு பூரணி. உனக்குத் தெரியுமோ?''

''சொன்னீங்க.''

''அப்படி யிருந்தும் 'பூரணி, பூரணி'ன்னு மனசு அடிச்சுக்கறதை நிறுத்த முடியலே. என் மனைவி நல்ல மாதிரி.. என் குழந்தை மேல் எனக்கு உசிரு. அப்படி யிருந்தும் ராத்திரி கட்டில்ல சாயறச்சே கண் தளர்ந்து தூக்கம் மூட்டறச்சே 'குட் நைட் பூரணி'' என்று சொல்லாமத் தூங்க முடியல்லே. நான் ஏமாத்திட்டதா நெனைச்சு நீ வருத்தப்படக் கூடாது. மனசுக்குப் புடிச்சவங்களை ஏமாத்தறது பாவம். கற்பழிக்கிறதுக்குச் சமானம். திட்டமிட்டுப் பண்ற கொலை. நீ சின்னப் பொண்ணு. வாழ்க்கையைப் பத்தி நிறைய நம்பிக்கை இருக்கும் உனக்கு. அத்தனையும் என் கால்ல கொட்டிட்டு அசிங்கப் படக்கூடாது''—மெரீனு ஹோட்டலில் மூடின தனி அறைக்குள்ளே வேண்டுமென்றே நேரம் கழித்துக் கிடைக்கிற சாக்லேட் ஐஸ்கிரீமுக்கு ஆர்டர் செய்து விட்டுப் பேசினான்.

பூரணியின் ஒரே நம்பிக்கை ஆபீஸ், நானூற்றி எழுபத்தி மூன்று ரூபாய் நாற்பது



நடிப்பு: திருமதி ரங்கநாயகி குருராஜ்
திரு குருராஜ்

பைசா சம்பளக் கவர். பூரணியின் அக்காவை விருகம் பாக்கத்தில் கொடுத்திருக்கிறது. அவள் சந்தோஷமாக இல்லை. மூன்று முறை அபார்ஷனாகி விட்ட ஒரே காரணத்துக்காக அவளைப் பத்துப் பாத்திரம் தேய்க்கிறவளாக அவள் புருஷன் நடத்திக் கொண்டிருக்கிறான். அதற்குக் கூடத் தெம்பில்லை என்கிறபோது பிறந்த வீட்டுக்குத் துரத்தி விட்டான். பூரணியின் அண்ணா ஒரு கிறிஸ்துவப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டான். ஜோசப் ஆனந்தன் என்று பெயரை மாற்றிக் கொண்டான். இருபத்தியாறு வயதில் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்த பூரணிக் கொடி எதேச்சையாய்க் கிடைத்த ராஜசேகரனைப் பற்றிக் கொண்டது. கொஞ்சம் கூடப் பொய்யற்று இருப்பவனைப் பிடித்துப் போயிற்று. மோட்டார் சைக்கிளில் அவன் முதுகைப் பிடித்துக் கொண்டு பீச்சும் சினிமாவுமாய் வாழ்க்கை ஓடிற்று.

விரலைத் தொட்டு, விழியைத் தொட்டு, தலையைக் கோதி, வருடி பாடி சின்னச் சின்ன விஷமங்கள் செய்து கொண்டிருந்த ராஜ சேகரன் அவளை முழுவதுமாய்த் தொட ஆசைப்பட்டான். அதை அவளிடம் ஒளிவு மறைவின்றிக் கேட்டும் விட்டான்.

"பூரணி, எனக்கு முழுக்க நீ வேணும் கிறது என் ஆசை. ஒனக்கு எம்மேலே அப்படி ஆசை உண்டா? உனக்கும் புடிச்சிருந்தா 'ஆமா'ன்னு சொல்லு."

பூரணி தலையை ஆட்டினாள்.

"வெரி குட். நாம ரெண்டு பேரும் ஒத்துப் போற விஷயம். இதுக்கப்புறம் என்ன? அதை இப்பவே யோசனை பண்ணிடுவோம். இது ஒரு கமிட்மெண்ட். ஒரு மாதிரியான ஒப்பந்தம். நெருப்பு இல்லாம, குருக்கள் இல்லாம பண்ணற கல்யாணம். சட்டப்படி சுத்தம். ஒனக்கு நான் வேணும்; எனக்கு நீ வேணும். கடைசி வரைக்கும் வேணும்; காலா காலத்துக்கும் வேணும். என்ன நடந்தாலும் உன்னை நானோ, என்னை நீயோ கைவிடக் கூடாதுன்னு அர்த்தம்; யாரு மடக்கிக் கேட்டாலும் தைரியமா, நெஞ்சு நிமித்தி ஆமான்னு சொல்ல முடியணும்; அந்தத் தைரியம் இல்லாம இதைச் செய்யறது அசிங்கம். இனிமே பூரணிங்கறது எனக்கு மனைவி. நான் அவளுக்குப் புருஷன். இந்த நெனைப்போட உன்னைத் தொடறது தான் சந்தோஷம். உனக்கும் நிம்மதி. இதுல என்ன கஷ்டம் இருக்குன்னு யோசனை பண்ணு. என் மனைவி அழுவா. சண்டை போடும். குழந்தையைக் கூட்டிக்கிட்டுப் பிறந்த வீட்டுக்குப் போறேன்னு சொல்லுவா. ஊர் முழுக்க வந்து சட்டையைப் புடிக்கும், காறித் துப்பும். பின்னாடி சிரிக்கும். உங்கப்பா சைக்கிள் ரிக்ஷா வைச்சு வீட்டுக்கு வந்து வாயிலே வந்தபடி கத்துவாரு. எனக்குத் தெரியும். அத்தனைக்கும் மிஞ்சி அப்படித் தான்னு சொல்லுவோம். ஆனா இதுல ஒரு சௌகரியம். இன்னி வரைக்கும் ஒரு ஈ காக்காய்க்குகூட இது தெரியாது. இதை நாம போய்ச் சொல்லணுமாங்கறதுதான் கேள்வி. தெரியறபோது தெரியட்டுமே; இத்தினி துணிவா நான் பேசறது பயமா இருந்தா வூட்டுக்குப் போயிடு. தலைக்குக் குளிச்சிட்டு நிம்மதியாப் படு. வயசாகி நிக்கக் கூட உடம்புல திராணி இல்லாமப் போகுது பாரு அப்பப் பார்த்துப் பேசிப்போம். எதிரும் புதிரும் உட்கார்ந்திட்டுப் பார்த்திட்டு இருப்போம். அந்த மாதிரி இப்பப் பாத்திட்டு இருன்னு சொல்லாதே. என்னாலே முடியல பூரணி."

"நீங்க பேசறது எல்லாம் எனக்குப் புரியுதுங்க. இப்படி வெளிப்படையா நீங்க பேசறபோதெல்லாம்தான் உங்களை விடவே கூடாதுன்னு வெறி வருது. ஆனா நீங்க இத்தனை பேசியும் எனக்குப் பயமாத்தான்க இருக்கு. எனக்குப் பயம் தெளிஞ்சு போச்சுன்னு ஒரு நாளும் சொல்ல முடியாதுங்க. அடி வயத்துல கனமா கல்லு மாதிரி நின்னு அது எந்த விதமாயும் முடியாம இப்படியே சாவ மாட்டமான்னு தோணுதுங்க."

"தப்பு பூரணி. இரண்டு பேரும் சேர்ந்து வாழலாங்கறபோது சாவைப் பத்திப் பேசறயே நல்லாவா இருக்கு? பயங்கறதைப் பத்தி யோசனை பண்ணு பூரணி. நம் எதிர்காலம் எதிர்க்க வர காலம் என்னவா இருந்தாலும் சரி, நாம பிரியற இல்லேன்னு தீர்மானம் பண்ணிட்டாப் பயம் என்ன? கடைசிவரைக்கும் சண்டை போடணும். இது ஒன்னால முடியுமான்னு யோசனை பண்ணு பூரணி. பயத்தை எடுத்து வெளியே போடு பூரணி, இன்னும் பயமா இருக்கா? என்னை நிமிர்ந்து பாரேன்." பூரணி அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவன் கையை எடுத்து மார்பில் பதித்துக் கொண்டான்.

ஒலி அலைகள் அடி மட்டத்தில் இருந்தால் எப்படி செவிகளுக்குக் கேட்பதில்லையோ, அதே விதமாய், மிக உச்ச கட்ட சுருதியில் இருந்தாலும் கேட்பதில்லை. ஆறு மாதங்களுக்கு மேலாகியும் பூரணி– ராஜசேகரன் விஷயம் யாருக்கும் எட்டவில்லை. ஒரு நாளின் முழு நேரத்திலும் ஒருவர் மேல் ஒருவருக்குண்டான அன்பு பெருகிப் பரவி பரஸ்பர அக்கறை அதிகரித்ததனாலோ என்னவோ இது மூன்றாமவருக்குக் கூடத் தெரியவில்லை. எட்டுகின்ற நிலைமையைப் பூரணி சுமந்து வந்தபோதும் ராஜசேகரன் அதிரவில்லை;

அப்பா: "கடைசியில் ஒரு வழியா உனக்கும் பொருத்தமான ஒரு பெண்ணைப் பேசி முடிச்சிட்டேன்!"
மகன்: "அப்படியா..?"
அப்பா: "ஆமாம்! அவளும் உன் மாதிரியே பி. ஏ. யில் மூணு வருஷம் பெயில்!"
— உ. ராஜாஜி



பூரணி தான் உண்டாகியிருப்பதை மெல்லச் சொன்னாள். ''இனிமே தெரியாது போயிடாதுங்க. என் உடம்பைக் கவனிச்சுப் பார்க்கறப்போ சீக்கிரமாவே தெரியும்னு படுது. திருப்பியும் பயமாத்தாங்க இருக்கு.''

பூரணி முகத்தைப் பொத்திக் கொண்டு அழுதாள்.

''உன் பயம் நியாயம்தான் பூரணி. ஜென்ம ஜென்மாப் பொம்பளைங்க படற பயம் இது. உனக்கு மட்டும் அது இல்லேன்னு ஆயிடுமா? உங்கப்பா கிட்டப் போகலாம்.''

''வேண்டாங்க. ரெண்டு மாசமா அப்பாவுக்கு உடம்பு சரியில்லே. இதைத் தாங்குவார்னு எனக்குத் தோணலே.''

''வேறெ என்ன செய்யறது பூரணி? மொதல்லெ எங்க வீட்டுக்குப் போனாலும் என்னோட மனைவிக்குத் தெரிஞ்சாலும் அதுக்கப்புறம் உங்கப்பாவுக்குத் தெரியத்தான் போகுது. வா. ரெண்டு நாள் என் வீட்லே இரு. அங்க நடக்கிற ரகளையை விட உன் வீட்டில் நடந்துடாது.

''வேணாங்க. இந்த இரண்டு இடமுமே இப்ப வேணாங்க.''

''வேற என்னதான் பண்றது பூரணி? சொல்லு. கடைசி வரைக்கும் இந்தப் பயத்தோட உறங்க கிடந்து என்ன பிரயோசனம் சொல்லு. சரி, ஒண்ணு பண்ணுவோமா? எனக்கு ஒரு டாக்டரம்மாவைத் தெரியும் வா. காலே எட்டு மணிக்கு அட்மிட் ஆனா நாலு மணிக்கு வீட்டுக்கு வந்துடலாம். வா.''

கை மடிப்பில் நரம்புகளைத் தேடி ஊசியைச் சொருகினபோது பூரணி வாய் விட்டு அலறினாள். ராஜசேகரன் அவளை இறுக அணைத்துக் கொண்டிருந்தான்.

''பூரணி இப்படிப் பயந்து அலறினா ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆகும். நான் சொல்றதைக் கேளு. தைரியமா இரு.''

''இந்த ஊசி, குத்தறபோதே ரொம்ப வலி வலிக்குதுங்களே இன்னும்...''

பூரணி முகத்தை அவன் தோள் பட்டையில் புதைத்துக் கொண்டாள். ''சாயந்திரம் வீட்டுக்குப் போக முடியுமான்னு தெரியலியே. உடம்பு முழுக்கப் புரட்டிப் புரட்டி எடுக்குதுங்க.''

''உனக்கு உடம்புல ஒண்ணும் இல்லே பூரணி. மனசுதான். பயத்தை எடு. அதை எதிர்த்து அதைத் தாங்கு. சிரி.''

''இப்பவே என்னைக் கண்ணாடிலே பார்க்கச் சகிக்கல்லே. இதுக்கப்புறம் பொம்பளையாவா நான் இருக்கப் போறேன். எலும்பும் தோலுமா எதுக்கும் உதவாதுன்னு போயிடுவோமோன்னு பயப்படறேன்.''

''ச்சீ... வாயைக் கழுவு. உனக்கு ஊர் மேலேயோ உங்க அப்பா கிட்டேயோ பயமில்லே. எங்கிட்டத்தான் பயம். உன்னைப் பத்தியும் உனக்குப் பயம். உடம்பு இல்லேன்னா ஆம்பிளை சிரிக்க மாட்டான்னு மட்டமான பயம். தைரியமா இரு. இத்தனை பயந்து பயந்து கீழேவிழுந்துட்டா எழுந்திருக்கறது கஷ்டம்.''



''நேத்து உன்னைப் பெண் பார்க்க வந்த பிள்ளையாண்டான் அசல் சினிமா நடிகர் போல இருந்தும் பிடிக்கலே என்று சொல்லி விட்டாயாமே!''

''அவர், உசிலைமணிக்கு அண்ணா; பக்கோடா காதருக்குத் தம்பி போல இருந்தாரே!''

---

பூரணியின் உடம்பு ஒருமுறை அதிர்ந்து குலுங்கியது. கண்கள் மெல்லச் சொருக அவன் மார்பில் துவண்டு சரிந்தாள். ராஜசேகரன் நர்ஸைக் கூப்பிட்டான். நர்ஸ் ''மயக்க மருந்து வேலை செய்கிறது'' என்று சொல்லி விட்டுப் பூரணியைச் சரியாய்க் கிடத்தினாள். ஸலைன் பாட்டிலுடன் பூரணியின் கட்டிலைத் தியேட்டருக்குள் தள்ளிக் கொண்டு போனாள்.

வெளியே வெய்யில் சிராய் இறங்கிக் கொண்டிருக்கிறது. நாற்பத்தைந்து நிமிடம் என்று சொன்னடாக்டரம்மாள் நாலு மணி நேரம் உள்ளே இருந்தாள். கடைசிவரை சுத்தப்படுத்த முடியாமல் பேஷண்ட் உடம்பை இறுகஅடித்துக் கொண்டதாகச் சொன்னாள். ஆக்ஸிஜன் சிலிண்டருக்கு அதிகப் பணம் கொடுக்கவேண்டுமென்று கூறினாள். உதவிக்கு இன்னொரு டாக்டரை அழைத்தாள். ரத்தம் கொண்டுவரக் காரை அனுப்பினாள். சிகப்பாய் சூரியன் சரிகின்ற நேரத்தில் நம்பிக்கை இல்லை என்று சொன்னாள். நட்சத்திரங்கள் பூத்து மேகங்கள் கறுப்பானவுடனேயே பூரணியின் மரணத்தை அறிவித்தாள்.

ராஜசேகரன் தியேட்டருக்குள் நுழைந்து உடல் முழுதும் வெள்ளைத் துணியால் போர்த்தியிருக்கிறதைப் பார்த்தான். பின் பக்கம் பெண்டில் சொருகியிருக்கிற பர்ஸைத் தொட்டுப் பார்த்தான். —

''ஒரு டி. அண். சி. கேஸ் போயிடுச்சு சார்; வேன் வேணும்'' என்று போனில் பேசிக் கொண்டிருக்கிற நர்ஸை உற்றுப் பார்த்தான். நீளமான மொஸைக் வராந்தாவில் நடந்து வந்து வாசற்படியில் அமர்ந்து கொண்டான். சற்று நேரத்தில் வேன் வந்து விடும். பூரணியைக் கூட்டிக் கொண்டு எங்கே போவது? அவள் அப்பா வீட்டிற்கா? தன்னுடைய இடத்திற்கா? பீச்சுக்கா? ஹோட்டலுக்கா? இல்லை யாரும் அறியாமல் தன்னந் தனியாய் எரித்து விட்டு வந்தால் கேள்வி கேட்காமல் இருப்பார்களா? ராஜசேகரனின் அடிவயிற்றில் மெல்ல மெல்ல ஒரு பயம் உதயமாகித் தகதகத்து எழுந்து உடம்பெங்கும் கதிர்கள் மீட்டிப் பரவி 'சுரீர்' என்று நெஞ்சைத் தாக்குகையில் அவன் விழத் துவங்கினான்.



# நான் கண்ட ரஷ்யா

**அகிலன்**

இரண்டு பேர்களுக்குச் சுமார் 800 சதுர அடி (40 × 20) என்றால், மூவருக்குச் சுமார் 1000 சதுர அடி (33X 33), அதற்கு மேல் நபர்கள் இருந்தால் இன்னும் பெரிய வீடு. வீட்டில் காஸ் அடுப்பு அல்லது மின் அடுப்பு, சமையல் சாமான்களுக்கான அலமாரி முதலியவை கொண்ட ஒரு சமையலறை; சமையல் அறையை யொட்டிய நீண்ட தண்ணீர்த் தொட்டி (பாத் டப்) கொண்ட குளியல் அறை; ஒரு படுக்கை அறை; ஒரு வசிக்கும் அறை — இதுதான் ஒரு சராசரி வீடு. தண்ணீரும் வெந்நீரும் எப்போதும் குழாயில் வரும். குளிர் காலங்களில் வீடு கதகதப்பாக இருக்கும்படி வெந்நீர்க் குழாய்கள் வீட்டுச் சுவரில் இணைக்கப்பட்டிருக்கின்றன. எல்லா வீடுகளுக்கும் மின் விளக்குகள் உண்டு.—பல அடுக்கு மாடிகள் உள்ள 'ஃபிளாட்' வீடுகள் தாம்.

80 லட்சம் மக்களைத் தன்னகத்தே கொண்டது மாஸ்கோ நகரம். இந்த 80 லட்சம் மக்களும் இப்படிப்பட்ட ஏதாவதொரு வீட்டுக்குள்தான் வாழுகிறார்கள் என்பதும், மாஸ்கோவாசியான எந்தக் குடிமகனும் தெருவிலோ, பிளாட்பாரத்திலோ, குடிசையிலோ, குப்பத்திலோ முடக்கிக் கொள்ளவில்லை என்பதும் நாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய செய்தியாகும். வெளியூர்களிலிருந்து யாரையும் மாஸ்கோவுக்கு மாற்றுவதென்றும், வீட்டு வசதி செய்து கொடுக்க முடிந்தாலே மாற்றுவார்கள். விருந்தாளிகளாகவும் உல்லாசப் பயணிகளாகவும் யாரும் மாஸ்கோவுக்கு வந்து செல்லலாம். நிரந்தரமாகத் தங்க வேண்டுமானால், முதலில் வேலையையும் வீட்டையும் உறுதி செய்து கொள்ள வேண்டும்.

சென்னையில் உள்ள இன்றைய வீட்டு வாடகை நிலவரப்படி பார்த்தால், ஒவ்வொரு வீட்டுக்கும் ரூபாய் 400லிருந்து 750 வரை நாம் மாத வாடகை கொடுக்க வேண்டியிருக்கும்.

விளக்குகளுக்கும் அடுப்புகளுக்குமான மின்சாரக் கட்டணம் யூனிட்டுக்கு இரண்டு கோபெக்கிலிருந்து நாலு கோபெக் வரைதான். கோபெக் என்பது ரூபிளில் நூறில் ஒரு பகுதி. நம்முடைய பைசாவைப் போன்றது. நான் முழுவதும் அடுப்புக்கான எரிவாயுவும் மின்சாரமும் கிடைக்கும். பழைய வீடுகளில் எரிவாயு அடுப்புக்கள்; புதிய வீடுகளில் மின்சார அடுப்புக்கள். வீட்டில் உள்ள நபர்களின் எண்ணிக்கையைப் பொறுத்து அடுப்புக்கள் சிறிதாகவும் பெரிதாகவும் இருக்கின்றன. எரிவாயுக் கட்டணம் நபர் ஒன்றுக்கு மாதம் ஒன்றுக்குப் பதினைந்து கோபெக்.

மாதத்துக்குத் தொலை பேசிக்கான கட்டணம் இரண்டரை ரூபிள்தான். உள் நகருள் நீங்கள் எவ்வளவு முறை பேசினாலும் இதே வாடகைதான். பால், தயிர்,



✖ மாஸ்கோ சுரங்க ரயில் பாதை ஸ்டேஷன்

✖ மாஸ்கோவில் ஒரு ஐந்து மாடிக் கட்டடத்தில் நவ நாகரிக சமையல் அறை

வெண்ணெய், ரொட்டி, பற்பசை, சோப் போன்றவை மிகவும் மலிவாகக் கிடைக்கின்றன. காய்கறிகள் மட்டும் பருவ காலங்களில் மலிவாகவும் மற்றக் காலங்களில் கிராக்கியாகவும் விற்கப்படுகின்றன. ரஷ்யர்களுக்கு மரக்கறி உணவு பெரும்பாலும் தேவைப் படுவதில்லை!

நகருக்குள் போக்கு வரத்துக்காக ஆகும் செலவுகள் பற்றி நண்பர்களிடம் விசாரித்தேன். மாஸ்கோவில் டிராம், டிராலி பஸ், பஸ், மெட்ரோ என்னும் பாதாள ரயில், மின்சார ரயில், வாடகைக் கார் எனும் ஆறு வகை வாகனங்கள் பொதுமக்களின் வசதிக்காக உள்ளன. சொந்தமாகக் கார் வைத்திருப்பவர்கள் பலர் இருக்கிறார்கள் என்றாலும், மேல் நாட்டு நகரவாசிகளுடன் ஒப்பிடும் போது, மாஸ்கோ வாசிகள் குறைவான கார்களையே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கான காரணத்தைப் பிறகு சொல்கிறேன்.





✖ ஹெலிகாப்டரிலிருந்து மாஸ்கோவின் ஒரு தோற்றம்

✖ மாஸ்கோ நோவாஸ்டி செய்தி நிறுவனத்தில் இந்திய எழுத்தாளர்களுக்கு வரவேற்பு. பிருத்வி சிங் ஆஜாத் நூலைப் பெறுகிறார். இடதுபுறம் ஓரத்தில் இருப்பவர் 'சோவியத் நாடு' பத்திரிகையின் மாஸ்கோ ஆசிரியர் திரு குல்லந்தர்

டிராமுக்கு மூன்று, டிராலி பஸ்ஸுக்கு நாலு, பஸ்ஸுக்கும் பாதாள ரயிலுக்கும் ஐந்து கோபெக்குகள். தொடங்கும் இடத்திலிருந்து முடியும் இடம் வரை பயணம் செய்யலாம். ஒரு நாள் மாலை நானும் அன்பர் சீபூர்னிகாவும் ஆளுக்கு ஐந்து கோபெக் செலவில் பல மெட்ரோக்களில் மாறி மாறி ஏறி இறங்கி நெடுந்தூரம் பயணம் செய்து திரும்பினோம்!

ஒவ்வொரு குடியிருப்பை ஒட்டியும் மருத்துவ மனைகள் இருக்கின்றன. மருத்துவத்துக்கு எந்தச் செலவும் இல்லை. பெரிய வியாதிகள் என்றால், அவர்களே அருகில் உள்ள பெரிய மருத்துவ மனைகளுக்கு அனுப்பி வைப்பார்கள். அவசரம் — அபாயம் என்று, நாம் தொலைபேசியில் தொடர்பு கொண்டால் நம் வீட்டைத் தேடிக் கொண்டு மருத்துவரும் தாதியும் வந்து விடுவார்கள். மருத்துவருக்கோ மருந்துக்கோ நாம் எந்தச் செலவும் செய்ய வேண்டியதில்லை. அது அரசாங்கத்தின் பொறுப்பு.

கல்விக்கும் நாம் காசைச் செலவிட வேண்டியதில்லை. இரண்டு வயது முதல் பால்வாடி, பாலர் பள்ளி எனத் தொடங்கி, ஏழாம் வயதிலிருந்து முறையாக எட்டு ஆண்டுகள் படிப்பு நடக்கிறது. பொதுவான இந்த அடித்தளக் கல்வி முடிந்த பின், அவரவர் விருப்பம் — திறமைக்கேற்ற மேற் கல்விக்கு அவரவர் செல்லலாம். அல்லது ஓரிடத்தில் வேலைக்கு அமர்ந்து சம்பளம் வாங்கிக் கொண்டு ஓய்வு நேரத்தில் மேற் கல்வியைத் தொடரலாம். படிக்க விரும்புவோருக்கு அங்கு செலவேதும் இடையாது.

இது மாஸ்கோவில் மட்டும்தான் என்பதில்லை. சோவியத் நாடெங்கும் இதே நிலை தான். அத்தியாவசியப் பொருள்களின் விலை



வாசி ஏற்றமே கிடையாது. ஆனால் அத்யாவசியமற்ற பொருள்களும் ஆடம்பரப் பொருள்களும் அங்கு அதிகமான விலைக்கு விற்கப்படுகின்றன. வெளியில் மலிவாகக் கிடைக்கும் உணவுப் பொருள்களும் மதுபானங்களும் கூட நட்சத்திர ஹோட்டல்களில் இருமடங்கு விலைக்கே கிடைக்கின்றன. நாடு முழுவதிலுமுள்ள எந்தக் குடியரசுக்குச் சென்றாலும் இதே போக்குத்தான். தங்கம், நவரத்தினக் கற்கள் போன்றவை அதிகமாக விலையேறி இருக்கின்றன.

சராசரி மனிதரின் வாழ்க்கை வளத்துக்கு ஒரே ஒரு எடுத்துக்காட்டு:

நண்பர் கே. ராமநாதன் அங்கு சென்று மூன்று ஆண்டுகள் ஆகின்றன. இரண்டு பேர் கொண்ட குடும்பம் அவருடையது. மாதம் சுமார் 300 ரூபிளுக்குள் அவர் சம்பாதிக்கக் கூடும். அதில் 80 ரூபிள் மாதா மாதம் இந்தியாவுக்கு அனுப்பி விடுகிறார். மீதமுள்ள பணத்தில் அவர் குடும்பச் செலவு செய்தது போக, இந்த மூன்று ஆண்டுகளில் ஒரு 'டெலிவிஷன்'; ஒரு குளிர் சாதன அலமாரி (ஃப்ரிட்ஜ்) ஒரு துணி சுத்தப்படுத்தும் இயந்திரம் (வாஷிங் மெஷின்) ஆகியவற்றை வாங்கியிருக்கிறார். அவருடைய வருமானம் சராசரி வருமானம்தான். ஆனாலும் திட்டமிட்டு வாழ்பவர்கள் அதைக் கொண்டு மிக வசதியாகவே அங்கு வாழ முடியும் என்று தெரிகிறது.

எங்களைப் போலவே சோவியத் நாடு நேரு விருது பெற்ற—நான்கு பேர் கொண்ட—மற்றொரு குழு தாஷ்கண்ட், சாமர்க்கண்ட் முதலிய மத்திய ஆசியப் பகுதிகளைச் சுற்றி விட்டு மாஸ்கோவுக்கு வந்திருந்தது. அங்கெல்லாம் நான் 73ம் ஆண்டே சென்று வந்ததால் வேறு குடியரசுகளை இம்முறை பார்க்க வேண்டுமென்று எழுதியிருந்தேன். ஆகவே குழுவை இரண்டாகப் பிரித்து வெவ்வேறு குடியரசுகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருந்தார்கள்.

இரண்டு குழுக்களும் அன்று மாஸ்கோவுக்கு வந்து விட்டதால், எங்கள் அனைவரையும் நோவாஸ்டி நிறுவனத்தார் ஒரு விருந்துக்கு அழைத்தார்கள். சமையற் கலையில் ஜார்ஜியக் குடியரசுக்காரர்கள் கைதேர்ந்தவர்கள். அவர்கள் நடத்திய ஒரு புகழ் பெற்ற உணவு விடுதிக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். விடுதியின் வாசலில் மாஸ்கோவாசிகளின் க்யூ வரிசை ஒன்று உள்ளே நுழைவதற்காகக் காத்து நின்றது. விலை அதிகமானாலும் அங்கே நல்ல சாப்பாடும் ஜார்ஜிய நாட்டு மதுவும் கிடைக்கும். அதோடு சாப்பாட்டுக்கிடையே நடைபெறும் இசையோடு ஆணும் பெண்ணும் சேர்ந்து ஆனந்தமாக நடனமும் ஆடலாம்.

ஏற்கெனவே ஹோட்டலில் எங்களுக்குப் பதிவு செய்யப்பட்டிருந்ததால் உடனடியாக நாங்கள் உள்ளே அழைத்துச் செல்லப்பட்டோம். எங்களோடு பாபா பிருத்வி சிங் ஆஜாத் தலைமையில் வந்த மற்றோர் எழுத்தாளர் குழுவும் சேர்ந்து கொண்டது. 87 வயதான இளைஞர் பிருத்வி சிங் ஆஜாத்—விடுதலைப் போரில் முதலில் மரண தண்டனையும், பிறகு ஆயுள் தண்டனையும் பெற்று அந்தமான் சிறையில் வாடியவர். இரு முறை கைவிலங்குகளுடன் ஓடும் ரயிலிலிருந்து குதித்துத் தலைமறைவானவர். 1931ல் ருஷ்யாவுக்குக் காபூல் வழியாகக் கால் நடையாகச் சென்றவர். பிறகு காந்தியடிகளிடம் வந்து சரணடைந்து, அவரால் போலீசுக்கு அனுப்பப்பட்டு வார்தா சிறையில் அடைக்கப்பட்டவர். சுமார் 45 ஆண்டுகளுக்குப் பிறகு அவர் மீண்டும் சோவியத் நாட்டுக்கு வந்துள்ளார்.

விருந்துக்குப் பிறகு நாங்கள் மீண்டும் எங்கள் ஹோட்டலுக்குச் சென்றோம். ஹோட்டலின் 18வது மாடியில் என்னுடைய அறை இருந்தது. அதிலிருந்தவாறு மாஸ்கோ நகரத்தைப் பார்த்தேன். அங்குதான் செஞ்சதுக்கத்தின் ஒரு புறத்தில் அந்தத் தேசத்தின் தந்தை மீளா உறக்கத்துள் ஆழ்ந்துள்ளார். அவர்தாம் அங்கு உறங்குகிறாரே தவிர, அவருடைய கொள்கைகள் அந்த நாட்டில் நாள்தோறும் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

நான் என்னுடைய நாட்டின் நிலையையும் என் தேசத் தந்தையையும் நினைத்துக் கொண்டேன். ''விடுதலை பெற்ற இந்தியா முதலில் ஒவ்வொரு குடிமகனுக்கும் வேலையும் உணவும் உடையும் கூரையும் கொடுத்தாக வேண்டும். அடிப்படைத் தேவைகளுக்கு அவதிப்படுபவர் இந்தியாவில் ஒருவர் கூட இருக்கக் கூடாது'' என்றார் காந்தியடிகள். நாடு விடுதலை பெற்று முப்பத்திரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. நாடாளுமன்ற ஜனநாயகத்தில் எத்தனையோ நாடுகள் எவ்வளவோ முன்னேற்றம் காணவில்லையா? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?

(தொடரும்)

---

தோழி: ''உன் மகளுக்கு ஊர்வசி என்று பெயர் வைத்திருக்கிறாயாமே''

நடிகை: ''பின்னே, எவ்வளவுதான் உயிரை விட்டு நடித்தும் எனக்கு அந்தப் பட்டத்தைத் தருவதாக இல்லையே, மகளுக்காவது கிடைக்கட்டுமே என்றுதான்!''

- ராமு



# திருப்பத்தூர் பெற்ற பாக்கியம்!

சென்ட்ரல் ரயில் நிலையம். பத்திரிகைப் பிரதிநிதிகள் திருப்பத்தூரில் நடைபெறும் கோடி அர்ச்சனை பூர்த்தி விழாவுக்குப் போவதற்காக அங்கு குழுமினர். திடீரென்று பகீரதன், ''ஸார்! இன்னும் கடவுளைக் காணோம்! பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று நழுவிச் சென்றார்.

இதென்ன வம்பு! கோடி அர்ச்சனை பூர்த்தி விழாவுக்குப் போகும்போது கடவுளைக் காணோம் என்றால்.... என்று எண்ணி முடிப்பதற்குள் ''இதோ கடவுள்!'' என்று அறிமுகப்படுத்தினார் பகீரதன்.

'கடவுள்' பத்திரிகை ஆசிரியர் ராமசாமி பத்திரிகைப் பிரதிநிதிகள் இருக்குமிடத்துக்கு வந்து சேர்ந்தார். திருப்பத்தூருக்குச் செல்லப் பத்திரிகைப் பிரதிநிதிகள் ரயிலேறினர்.

திருப்பத்தூர் ராமகிருஷ்ண - உயர்நிலைப் பள்ளி. பெரிய கொட்டகையில் வரிசை வரிசையாகக் கேரள பாணி குத்துவிளக்குகள் பள பளவென்று பிரகாசிக்கின்றன. சுடர்கள் அடக்கமாக ஒளிர்கின்றன. விளக்கு வரிசைக்கு இருபுறமும் திருப்பத்தூர்வாசிகள் —ஆண் பெண் குழந்தைகள் அடங்கலாக அமர்ந்திருந்து இடக் கரத்தை நெஞ்சில் பதித்து வலக்கரத்தால் அட்சதை எடுத்து அர்ச்சனை செய்கின்றனர். அதே நேரத்தில் மேடை மீது கோவில் உற்சவப் படிமங்களுக்கும் அர்ச்சனை நடக்கிறது. கண்கொள்ளாக் காட்சி. ''ஓம் ஹ்ரீம் நமச்சிவாய, ஓம் நமோ நாராயணாய'' என்று நூற்றுக் கணக்கான கண்டங்களிலிருந்து ஒலிக்கும்போது, செவிகள் மட்டுமின்றி மனமும் ஆத்மாவும் நிறைகின்றன. ஒரு மணி நேர அர்ச்சனைக்குப் பிறகு இவர்கள் எழுந்து செல்ல, அடுத்து வேறு இருநூற்றைம்பது பேர்கள் வந்து அமர்கின்றனர். அர்ச்சனை தொடர்கிறது.

இப்படி நடத்துவதில் என்ன தாத்பரியம்? ''பக்தி இல்லாத ஞானம் தங்க முலாம் பூசிய பித்தளை போன்றது'' என்றார் ராஜாஜி. சுவாமி அபேதானந்தா விளக்குகிறார்: ''ஞான மார்க்கத்தில் பகவானை அடைவது ரொம்பக் கஷ்டம். பக்தி மார்க்கமே எளிது. அதை மேலும் எளிமையாக்கி இறைவன் நாமத்தைத் திரும்பத் திரும்பக் கூறுவதிலேயே மக்களிடம் பக்தி மேலிடச் செய்வது தான் நோக்கம். கோயிலுக்குச் சென்று அர்ச்சனை, அபிஷேகம் செய்தால் கூடப் பொது மக்கள் நேரடியாக அதில் பங்கு பெறுவதில்லை. இது போன்ற அர்ச்சனைகளில் அந்த அந்த ஊர் மக்கள் தாங்களே ஈடுபடுகிறார்கள்; பக்தி பரவசமாகிறார்கள். இறைவன் நாமாவளியைப் பலநூறு கண்டங்கள் ஒருசேர உச்சரிக்கும் ஒலி காற்றில் கலந்து பரவும்போதே ஊரில் சூழ்நிலை சுத்தப்படுகிறது. அர்ச்சனையான அட்சதை வீண் போவதில்லை. ஏழைகளுக்கு அன்னதானம் செய்யப்படுகிறது.''



✖ கோடி அர்ச்சனை நடக்கிறது



✖ நிறைவு விழாவில் பங்கேற்ற நா. மகாலிங்கம் பேசுகிறார். விழாக்குழு உறுப்பினர்கள், வலது கோடியில் சுவாமி அபேதானந்தா

# வாசகர்களுக்கு அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்

## இந்த வாரக் கண்கள்:

ரத்தி



## இந்த வாரக் கவிதை:

நாணிற் குவளை கவிழ்ந்து
நிலன் நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம்
என்று.

— குறள்

திருவனந்தபுரம் அபேதாச்ரமத்தில் கடந்த கால் நூற்றாண்டாக இரவு பகல் இடைவெளியின்றி ஹரே ராம ஹரே கிருஷ்ண நாம ஜபம் நடக்கிறது. சுவாமி அபேதானந்தா எளிமையே வடிவானவர். யாத்திரை போன இடத்தில் ஒரு முறை கீழே விழுந்து கை எலும்பு முறிவு ஏற்பட்டும் அமைதியாகப் பொது மருத்துவமனை எங்கிருக்கிறது என்று விசாரித்து அறிந்து நடந்தே சென்று கியூவில் நின்று வைத்தியம் பார்த்துக் கொண்டவர். டாக்டர் இந்த மகானைக் காக்க வைத்து விட்டோமே என்று பதறிப் போய்விட்டார். அவருக்கு அபேதானந்தா கடமையாற்றுமாறு தைரியம் சொல்லித் தேற்ற வேண்டியிருந்தது! இத்தனை எளிய துறவிக்கும் ஒரே ஒரு ஆசை உண்டு! அகண்ட நாம ஜபம் பல்வேறு ஊர்களில் முடிந்தபொழுதெல்லாம் நடத்திவைக்க வேண்டும் என்பது தான். அந்த ஆசை பல ஊர்களில் நிறைவேறி வருவதன் தொடர்பாக வட ஆர்க்காடு திருப்பத்தூர் மக்களும் அவர் விருப்பத்தை அண்மையில் பூர்த்தி செய்து வைத்தார்கள். பொள்ளாச்சி நா. மகாலிங்கம் ஊர்வாசிகளுக்குப் பக்க பலமாய் இருந்தார்.

[illegible] கோடி அர்ச்சனை பூர்த்தி விழா. திருவனந்தபுரம் அபேதானந்த அடிகளுடன் திருவலம் சிவானந்த மௌனகுரு சுவாமிகளும் மேடையில் காட்சி தந்தார். திருவலம் சுவாமிகள் எளியோர்க்கு ஏற்ற எளிய குருவாக எளியோர் பாணியிலேயே பேசி அவர்களை நல்வழிப்படுத்துகிறவர். கோணித் துணியைத்தான் தரிப்பார். சாக்கு மீதுதான் அவர் அமர்வார்.

திருப்பத்தூரிலும் திருவலம் சுவாமிகளுக்கு இரண்டு சாக்குகளைக் கோடி அர்ச்சனைக் கமிட்டியினர் வழங்கினர். அதையும் ஏலம் விட்டு விட்டார் அவர்! அறுநூறு ரூபாய்க்கு மேல் கொடுத்துப் பக்தர்கள் அந்த இரு சாக்குகளையும் வாங்கிக் கொண்டனர்! பணம் கோடி அர்ச்சனை நிதியிலேயே சேர்ந்து விட்டது.

திருப்பத்தூர் கோடி அர்ச்சனை விழாக் குழுவினர் பதுமநாபன், தத்த செட்டியார், மாரிமுத்து செட்டியார், டி. பி. தங்கவேல், திருநாராயண செட்டியார் முதலியோர் பாடுபட்டுப் பணியாற்றி எடுத்த காரியத்தை வெற்றிகரமாக நடத்தி முடித்ததற்கு வாழ்த்துப் பெற்றார்கள்.

அதோடு வாழையடி வாழையாகத் திரு நா. மகாலிங்கம் அவர்களது புதல்வி கருணாம்பிகைக்கும் தகப்பனாரைப் போலவே பக்திச் செல்வம் குறைவற அமைந்திருக்கிறது என்பது இந்த விழாவின்போது நிதர்சனமாகத் தெரிய வந்தது. கருணாம்பிகை தமது இரு தோழிகளுடன் கோடி அர்ச்சனை அரங்கினைச் சுத்தப்படுத்தி அலங்கரிப்பதிலிருந்து சுவாமி அபேதானந்தருக்கு விசிறும் பாக்கியம் பெறுவது வரையில் பல காரியங்களுக்காகவும் ஓடியாடி உழைத்ததை மறக்க இயலாது.

— குண்டுமணி

- மறைந்த தேவருக்குக் காணிக்கையாக்கியிருக்கிறார்கள் இந்தப் படத்தை. அவர் பயன்படுத்த மறந்த கழுதையைக் கதாநாய(கி)யாக்கியுள்ளனர்.
- காட்சிக்குக் காட்சி பாடலுக்குப் பாடல் தியேட்டரில் 'உம், உம்' விசில் ஒலி, காதைத் துளைக்கும்படி எழுகிறது என்றால் இந்த 'ஏ' முத்திரை பெற்ற படத்தில் காதல் காட்சிகளும் பாடல்களும் எப்படி இருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.
- கதாநாயகியின் பெயர் பஞ்சவர்ணம். அவள் வளர்க்கும் கழுதையின் பெயர் கல்யாணி. ஆகவே படத்தின் பெயர் பஞ்சகல்யாணி. வண்ணார் குலத்தின் வாழ்க்கை. சக்கையாக அடித்துத் துவைத்துக் கசக்கி உலர்த்தியிருக்கிறார்கள் செக்ஸ் காட்சிகளே!
- ஆமாம், தண்ணீர்த் துறையிலேயே வாழும் வண்ணாரப் பெண்ணுக்கு நீந்தத் தெரியாதா? ஐந்தாறு ஆண்களைக் காலாலும் கையாலும் சாடி (கராத்தே சாடல்) ஓட ஓட விரட்டி அந்தரடித்துப் பாயும் அதிவீர பராக்கிரம பஞ்சவர்ணத்துக்கு நீந்தத் தெரியாதாவது? நம்ப முடியவில்லை.
- ஹாஸ்யம் எப்படி இருக்க வேண்டும் என்று நினைவுபடுத்த கே. ஏ. தங்கவேலுவும் வருகிறார்.
- மிருகங்களை வைத்துக் கதை பண்ணும்போது கற்பனை கொஞ்சம் மிகையாகத்தான் இருக்கும். ஒப்புக்கொள்கிறோம். ஆனால் கல்யாணியை வைத்து ரொம்பவும்தான் காது குத்தப் பார்க்கிறார்கள்.
- வெள்ளித்திரை மூலம் செக்ஸ் விற்ற காசு செல்லாதா என்ன?



# பஞ்சகல்யாணி

படவிமரிசனம்




ஒரு படத்தில் பிரபலமான பாடலின் முதலடியையே தலைப்பாக்கி இன்னொரு படம் தயாரிக்கும் வழக்கம் மறுபடியும் தலைதூக்கியுள்ளது.

பகலெல்லாம் உழைப்பு இரவெல்லாம் உல்லாசம் என்ற கொள்கையுடைய 'பிளே பாய்'க சிவகுமார் வருகிறார். கதைப்படி அண்ணன் மோகன்தான் (சிவசந்திரன்) பல தீய வழிகளில் கெட்டழிந்தவன். இளையவன் ராஜா (சிவகுமார்) திறமைசாலி, யோக்கியன் (பெற்றோர் கணிப்பில்). ஆனால் மோகனின் நடத்தை கெட்ட தனத்துக்கு ஒரு காட்சிகூடக் கிடையாது. ராஜாவின் 'மது மாது' காட்சிகளோ ஏராளம்.

ஸ்ரீப்ரியா பாத்திரம் ஏதோ பெரிய ஸஸ்பென்ஸோடு ஆரம்பமாகிறதே என்று சந்தோஷப் பட இருந்தது. ஆனால் அது நீடிக்கவில்லை. மீனாட்சி (ஸ்ரீப்ரியா) ஒரு கால் கேர்ள். அது தெரியாமல் அவள் மீது காதல் கொள்கிறான் 'பிளே பாய்' ராஜா. ஒரு நாள் இரவுத் தேவைக்கு உருப்படிகள் 'சப்ளை' செய்பவனால் அனுப்பப்பட்டு மீனாட்சியே வரும்போது ராஜா அடையும் அதிர்ச்சி, தான் இப்படி ஆனதற்கு அவள் கூறும் காரணம், பிறகு அவளே ராஜாவின் சகோதரன் மோகனின் மனைவியாகி சுமங்கலி என்ற பெயரில் அவனுக்கே அண்ணியாகி வருவது - எப்படியெல்லாமோ போகிறது கதை. மர்மத்திலாழ்த்துவதற்காகக் கதையை எப்படியெல்லாமோ கொண்டுபோய்ப் பிறகு எப்படியாவது முடித்தாக வேண்டுமே என்ற நிலையில் இரு முனைகளையும் ஒன்று சேர்த்து முடிச்சுப் போட்டு விடுகிறார்கள். ஆனால் முடிச்சு இறுகவில்லையே! ஸஸ்பென்ஸ் என்று நாம் நினைத்து நிமிர்ந்து உட்காரும்போதெல்லாம் சப்பென்றாக்கி நம் ஆர்வத்தைச் சிதற அடித்து விடுகிறார் கதாசிரியர் மாதங்கன்.

எல்லோரும் கராத்தே அடிதடி நடத்தும்போது, மனோரமா சும்மா இருக்கலாமா? கறுப்புப் பட்டைக் காரியாக வந்து செங்கல்லை உடைப்பது படா வேடிக்கை.

என்னடி மீனாட்சி - நீ வாழ்ந்தது போயாச்சு;

**- கௌசிகன்**




Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## ஆண்டவனுக்கு முடிகாணிக்கை செலுத்துதல்

ஆண்டவனுக்கு முடிகாணிக்கை செலுத்துவதன் தாத்பரியம் மனிதன் தனது டாம்பீகத்தை உதறிவிட்டு, பரமனின் மலரடிகளில் தன்னைப் பூரணமாக அர்ப்பணித்துக் கொள்ளுவதற்கான அடையாளமே. ஆகவே ஆண்டவனுக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொள்ளும் வகையில் முடிகாணிக்கை முறை மிகப்பிரபலமாக உள்ளது.

ஆனால் இந்தவேண்டுதலை முழுதாக நிறை வேற்றப்படவேண்டுமானால், வழிவழியாகப் பின்பற்றப்பட்டுவரும் முறைப்படி இம்முடி காணிக்கையை ஆண்டவனுக்குச் சமர்ப்பிக்கவேண்டும். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் இம்முக்கியமான காணிக்கையை பக்தர்கள் முறைப்படி செலுத்த இதற்கெனப் பிரத்தியேகமான கல்யாண கட்டத்தை நிறுவி இருக்கிறார்கள். எங்கேயோ, யாராலோ தலையை மழித்துக்கொண்டு விடுவதால் முடிகாணிக்கையின் புனிதம் காப்பாற்றப்பட மாட்டாது. தேவஸ்தானத்தாரால் இதற்கென நியமிக்கப்பட்ட நாவிதர்கள் மூலம் கல்யாணகட்டத்தில் முடி காணிக்கை செலுத்தப்பட்டால்தான் அதன் குறிக்கோள் நிறைவு பெறும்.

ஆகவே முடிகாணிக்கை செலுத்த விரும்பும் யாத்ரீகர்கள் இப் பிரார்த்தனையை தேவஸ்தானத்துக் கல்யாண கட்டத்தில் மட்டுமே நிறைவேற்றிக் கொள்ளக் கோரப்படுகிறார்கள். கல்யாணகட்டத்தில் இதற்காகவே கைதேர்ந்த நாவிதர்கள் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். விரும்புபவர்களுக்கு அருகிலேயே கடுநீர் ஸ்நானத்துக்கு வெந்நீர் (மலிவாக) கிடைக்கவும் வசதி செய்யப்பட்டுள்ளது. தங்கள் தங்குமிடங்களான காட்டேஜிலேயே முடி இறக்கிக்கொள்ள விருப்பமுடைய பயணிகள் தேவஸ்தானத்தார் மூலம் அதற்கும் ஏற்பாடுசெய்து கொள்ளலாம்.

கல்யாண கட்டத்திலோ, காட்டேஜிலேயோ முடி இறக்கிக் கொள்ளுவதற்குக் குறைந்த கட்டணத்தில் டிக்கெட்டுகள் தேவஸ்தானத்தில் கிடைக்கின்றன. நாவிதர்களுக்குக் கூடுதலான தொகை தரும் தொல்லை கிடையாது.

**P.V.R.K. பிரசாத் I.A.S.**
**எக்ஸிக்யூடிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 60 மலேயக் காசு

# POWER for bigger profit !

## THE P6/354

## 120 BHP for Vehicular and 90 BHP for Industrial applications

**The P6/354 is a cost effective power unit specially designed to give higher productivity at lower fuel consumption levels.**

**It's 5.8 litres swept volume together with the direct fuel injection system ensures instant and sustained power output at all load conditions.**



**Engineered to perform under the worst operational conditions the P6/354 has earned a reputation for reliability.**

**This profitable prime mover is available in both industrial and vehicular versions and is backed up by a nation wide service and parts outlets.**

*Manufactured and Marketed by*

Simpson & Co. Ltd

**861/862, Anna Salai, Madras-600 002**

MAC/S/404/78 A